# தர்மசக்கரம்





காளயுக்தி ஹு கார்த்திகை மீ சக்கரம் 27 ஆரம் 11

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

திருப்பராய்த்துறை - 639 115 திருச்சி ஜில்லா.

## அந்தர்யோக விவரங்கள்

**இராமநாதபுரம் ஜில்லா—பள்ளத்தூரில் 19—11—78 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: சிவன் கோவில்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி குஹானந்தர்
உணவு வசதி: நேரில் ரூ. 1-25 செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

**வட ஆற்காடு ஜில்லா—வேலூரில் 26—11—78 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: திருவேங்கடவன் மேநிலைப்பள்ளி
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**திருநெல்வேலியில் 26—11—78 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: மதுரை திரவியம் தாயுமானவர் ஹிந்து கலாசாலை உயர்நிலைப்பள்ளி
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி பரானந்தர்

**திருச்சியில்—சின்னசெட்டித் தெரு 26—11—78 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: ஸ்ரீ சித்தி விநாயகர் கோவில் K. P. S. சௌந்தரம்மாள் கல்யாண மண்டபம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி துருவானந்தர்

**தென் ஆற்காடு ஜில்லா—அவலூர்பேட்டையில் 3—12—78 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: அரசினர் உயர்நிலைப்பள்ளி
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**சேலம் ஜில்லா—ராசிபுரத்தில் 10—12—78 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: தெய்வீக வாழ்க்கைச் சங்கம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**திருநெல்வேலி ஜில்லா—சேரன்மஹாதேவியில் 17—12—78 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: பாரத்வாஜ ஆச்ரமம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
உணவு வசதி: நேரில் பகல் உணவுக்கு ரூ. 1-50ம் மாலை சிற்றுண்டிக்கு 75 பைசாவும் செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

**கோவை ஜில்லா—குமரன் குன்று ஆலயத்தில் 17—12—78 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: அருள்மிகு ஸ்ரீ கல்யாண சுப்பிரமணியசுவாமி ஆலயம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

# தர்ம சக்கரம்

மாத சஞ்சிகை

| சக்கரம் 27 | காளயுக்தி ௵ கார்த்திகை ௴ | ஆரம் 11 |
|---|---|---|

பொருளடக்கம் — பக்கம்



## சந்தா விவரம்

டிபாஸிட் சந்தா: ரூ 100 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்துவிட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும்வரையில் மாதந்தோறும் தர்மசக்கரப் பத்திரிகை தங்களுக்கு வந்து கொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தாச் செலுத்திப் புதுப்பிக்க வேண்டியதில்லை. பத்திரிகை வேண்டாம் என்று கருதும்பொழுது டிபாஸிட் செய்த ரூபாய் நூறையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

ஆண்டு சந்தா: ரூ. 10 செலுத்தியது முதல் அல்லது அடுத்த மாதம் முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

சகாய சந்தா: தர்ம சக்கரம் அடக்க விலைக்கு வெளியிடப்படுகிறது. ஆண்டு சந்தா ரூபாய் பத்து செலுத்த இயலாதவர்கள் ரூபாய் ஐந்து மட்டும் அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவி நிதி' யினின்று ஈடுசெய்து கொள்கிறோம். தெய்வீக விஷயமாதலால் ரூபாய் பத்துச் செலுத்த இயலுகிறவர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்த வேண்டாம்.

இலவச சந்தா: தமிழக அரசாங்கத்தால் தமிழ்நாட்டில் 1445 பொது நூலகங்கள் அமைக்கப்பெற்றுள்ளன. அவை அனைத்திற்கும் தர்ம சக்கரம் இவ்வாண்டு ஆவணிமாதம் முதல் தொடர்ந்து அன்பர்களின் உதவியால் இனமாக அனுப்பப்பெறுகிறது. நூலக நிர்வாகியிடம் கேட்டுப் பெற்றுப் படித்துப் பயனடையக் கோருகிறோம். இந்த ஞானயக்ஞத்துக்குப் பொருளுதவி செய்ய விரும்புவோர் தர்ம சக்கரம், திருப்பராய்த்துறை-639 115, திருச்சி மாவட்டம் என்ற விலாசத்துக்கு எழுதித் தெரிந்து கொள்ளலாம்.

**உள்நாடு தனி இதழ் ரூ. 1-00. வெளிநாடு வருட சந்தா ரூ. 20-00**

# ஸ்ரீ தாயுமான சுவாமிகள்
## கோயில் திருப்பணி



ஸ்ரீ தாயுமான சுவாமிகள் தபோவனம் திருப்பணி சம்பந்தமாக அக்டோபர் மாதம் 16ஆம் தேதி திங்கட்கிழமையன்று ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்த, சுவாமி பரானந்த, என்ஜினியர் பூஞ்சோலை, திரு. அரசு ஆகிய நால்வரும் இராமநாதபுரத்துக்குப் புறப்பட்டுச் சென்றூர்கள். தாயுமான சுவாமிகள் சமாதிக்கோயிலுக்குச்சொந்தமாக நான்கு துண்டு நிலங்கள் இருக்கின்றன. அவையாவின் மொத்த விஸ்தீரணம் சுமார் 4 ஏக்கர் பூமியாகும். சமாதிக் கோயில் அமைந்துள்ள நிலம் 2½ ஏக்கர் விஸ்தீரணம் உடையது. அது அளந்து எடுக்கப்பட்டு இன்னின்ன இடங்களில் இன்னின்ன கட்டடங்கள் அமைப்பது எனமுடிவு செய்யப்பட்டன. முதன் முதல் கட்டவேண்டிய கட்டடங்கள் துறவியர்களும், மற்றவர்களும் தங்குவதற்கான ஆச்ரமம், அதற்குரிய சமையல்கட்டு ஆகியவைகளாம். அவைகளுக்கேற்ற வரைபடம் அமைக்கப்பெற்றிருக்கிறது. ஐப்பசி மாதத்தில் மழை பெய்து ஓய்ந்தான பிறகு கார்த்திகை மாதத்தின் பிற்பகுதியில் கட்டடவேலை துவங்குவதாக முடிவு செய்யப்பட்டது. இப்பொழுதிருந்தே அதற்குத் தேவையான கருங்கல் ஜல்லி, மணல், சுண்ணும்பு முதலியன சேகரிப்பதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன.

### 1978 அக்டோபர் மாத நன்கொடை விவரம்

| தேதி | விலாசம் | | | ரூபாய் |
|---|---|---|---|---|
| | செப்டம்பர் மாதம் நன்கொடை | | | 13 395-23 |
| 1-10-78 | ஸ்ரீ V.N. வைத்தியநாதன் | | மதராஸ் | 151-00 |
| | ஓர் அன்பர் | வெல்லூர் | வடஆர்க்காடுஜில்லா | 100-00 |
| 3-10-78 | ஸ்ரீ S.V.Rm.A. நடராஜமுதலியார் | அம்பாசமுத்திரம் | திருநெல்வேலி | 1 000-00 |
| | ஸ்ரீ S.S. வெங்கடசாமி | காமயகவுண்டன்பட்டி | மதுரைஜில்லா | 250-00 |
| | ஸ்ரீமதி புத்தியம்மாள்—கண்ணம்மாள் | ,, | ,, | 101-00 |
| 4-10-78 | ஸ்ரீமதி R. சீனித்தாய் அம்மாள் | ,, | ,, | 103-00 |
| 5-10-78 | ஸ்ரீ P. அங்கமுத்து முதலியார்&Co. | ஈரோடுகோட்டை | கோவைஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ K.S. தனுஷ்கோடிராஜா | ராஜபாளையம் | ராமநாதபுரம்ஜில்லா | 100-00 |
| 6-10-78 | ஸ்ரீ N.K. தர்மராஜ் | காமயகவுண்டன்பட்டி | மதுரைஜில்லா | 1 001-00 |
| | M/s.C. வள்ளிநாயகம்பிள்ளை | திருவனந்தபுரம் | கேரளா | 101-00 |
| 7-10-78 | ஸ்ரீ K. ஷண்முகம் | ஒக்கிலியர் தெரு | கோவை | 101-00 |
| 8-10-78 | ஓர் அன்பர் | வள்ளுவர்நகர் | மதராஸ் | 1 000-00 |
| 9-10-78 | ஸ்ரீ K.P.S. சந்தானம்செட்டியார் &Co. | திருச்சி | | 501-00 |

| | | | | |
|---|---|---|---|---|
| | ஸ்ரீ P. கிருஷ்ணசாமி கவுண்டர் | அரண்மனைபுதூர் | கோவைஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ K. ராஜேந்திரன் செட்டியார் | திருச்சி | | 101-00 |
| | ஸ்ரீ N. கோபாலன் | ,, | | 101-00 |
| | ஸ்ரீ A. ரெங்கசாமி செட்டியார் | தில்லைநகர் | திருச்சி | 101-00 |
| | ஸ்ரீ P.M. வேலுசாமி | பள்ளபாளையம் | கோவை ஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ P. அருணசலம் | மாத்தூர் | புதுக்கோட்டை ஜில்லா | 100-00 |
| 10-10-78 | ஸ்ரீ M. கந்தசாமி | தென்னூர் | திருச்சி | 108-00 |
| | ஸ்ரீ T.K.M. கணேசன் | திருப்பூர் | கோவை ஜில்லா | 105-00 |
| | ஸ்ரீ C. ஆறுமுகபாண்டியன் | காயாமொழி | திருநெல்வேலி ஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ V. ராமகிருஷ்ணன் | பள்ளிவாசல் | புதுக்கோட்டை | 101-00 |
| | ஸ்ரீ ஏகாம்பரம் | பிரகாஷ் ஏஜன்ஸிஸ் | மதராஸ் | 101-00 |
| | ஸ்ரீ M. விஸ்வநாதன் ரெட்டியார் | அந்தல் | தென்ஆற்காடு ஜில்லா | 100-00 |
| | ஸ்ரீமதி சபிதாராஜன் | மேன்ஸ்பீல்டு | அமெரிக்கா | 100-00 |
| 11-10-78 | ஸ்ரீமதி N. ராஜாம்பாள் | திருவண்ணமலை | வடஆற்காடு ஜில்லா | 1 001-00 |
| 13-10-78 | ஸ்ரீ T.S. அவினசிலிங்கம் | ஸ்ரீ ராமகிருஷ்ணமிஷின் வித்யாலயா | கோவை | 1 000-00 |
| 16-10-78 | ஸ்ரீ A.M. M.S. கணேசன் | தூத்துக்குடி | திருநெல்வேலி ஜில்லா | 1 000-00 |
| 17-10-78 | ஸ்ரீமதி R. காந்திமதி அம்மாள் | விருதுநகர் | ராமநாதபுரம் ஜில்லா | 126-00 |
| | ஓர் அன்பர் | ,, | ,, | 106-00 |
| | ஸ்ரீ N. ராஜேந்திரன் | ,, | ,, | 105-00 |
| | ஸ்ரீ K. சன்னசி | காமயக்கவுண்டன்பட்டி | மதுரைஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ V.M.K.P. தியாகராஜன் | விருதுநகர் | ராமநாதபுரம்ஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ S. அழகராஜா கோன் | மதுரை | | 100-00 |
| | ஸ்ரீமதி A.D. மரகதவல்லி | டிஸ்ட்ரிக் போர்டு காலனி | மதுரை | 100-00 |
| 19-10-78 | ஸ்ரீ P. ஷண்முகம் | மதுரை | | 100-00 |
| 20-10-78 | ஸ்ரீமதி K. வள்ளியம்மாள் | பொள்ளாச்சி | கோவை ஜில்லா | 101-00 |
| 21-10-78 | ஸ்ரீ K.R. அருணசலம்செட்டியார் | மேட்டுப்பாளையம் | ,, | 108-00 |
| | ஸ்ரீமதி A. பார்வதிஅருணசலம் | ,, | ,, | 108-00 |
| 23-10-78 | ஓர் பக்தை | சேலம் | | 210-00 |
| | ஸ்ரீ V.S. கிருஷ்ணசாமி | காமயக்கவுண்டன்பட்டி | மதுரைஜில்லா | 151-00 |
| | ஸ்ரீ P. ஷண்முகசுந்தரம் | அம்மாபேட்டை | சேலம் | 101-00 |
| | ஸ்ரீ N. மாணிக்கம் முதலியார் | சேலம் | | 101-00 |
| 24-10-78 | ஸ்ரீ P.A. ராஜு செட்டியார் | ராஜாசெட்டியார் சாரிட்டி டிரஸ்ட் | கோவை | 200-00 |
| 25-10-78 | ஸ்ரீ K.V. கருப்பன்செட்டியார் | காமயக்கவுண்டன்பட்டி | மதுரைஜில்லா | 501-00 |
| | ஸ்ரீ K.N.M. பாலசுப்பிரமணியம் | ,, | ,, | 501-00 |
| | ஸ்ரீ P.M. மாரிமுத்துமுதலியார் | துறையூர் | திருச்சிஜில்லா | 500-00 |
| | ஸ்ரீ C. மகாலிங்கம் | குகை | சேலம் | 125-00 |
| | ஸ்ரீமதி ரங்கநாயகி மகாலிங்கம் | ,, | ,, | 125-00 |
| | ஸ்ரீ G. குருசாமி | காமயக்கவுண்டன்பட்டி | மதுரைஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ V.K. ரங்கசாமி கவுண்டர் | சங்ககிரிதுர்க்கம் | சேலம்ஜில்லா | 101-00 |
| 26-10-78 | ஸ்ரீ S. ரங்கசாமி செட்டியார் | வேம்படிதாளம் | சேலம்ஜில்லா | 500-00 |

| | | | | |
|---|---|---|---|---|
| | ஸ்ரீ R. விஜயகுமார் | காமயக்கவுண்டன்பட்டி | மதுரைஜில்லா | 251-00 |
| | ஸ்ரீ P. விருமல்லம்மாள் | ,, | ,, | 151-00 |
| | ஸ்ரீ G. ராமகிருஷ்ணன் | ,, | ,, | 101-00 |
| | ஸ்ரீ V. பாண்டுரங்கன் | ,, | ,, | 101-00 |
| | ஸ்ரீ M.N.C. வீரபத்திரசெட்டியார் | திருப்பூர் | கோவை ஜில்லா | 101-00 |
| | Dr. R.K. கந்தசாமி | ,, | ,, | 100-00 |
| 27-10-78 | ஸ்ரீ A.M.K. சுப்புகவுடர் | காமயக்கவுண்டன்பட்டி | மதுரைஜில்லா | 105-00 |
| | ஸ்ரீ K. பழனி முதலியார் | அம்பாசமுத்திரம் | திருநெல்வேலிஜில்லா | 101-00 |
| | ஸ்ரீமதி E. தனுஷ்கோடிஅம்மாள் | ,, | ,, | 101-00 |
| | ஸ்ரீ M.S. முருகேசன் | காமயக்கவுண்டன்பட்டி | மதுரைஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ S. திருநாவுக்கரசு | சிதம்பரம் | தென்ஆற்காடுஜில்லா | 100-00 |
| | ஸ்ரீ M. லக்ஷ்மணன்செட்டியார் | செவ்வாய்ப்பேட்டை | சேலம் | 100-00 |
| | ஸ்ரீ L. கோபாலகிருஷ்ணன் | ,, | ,, | 100-00 |
| | ஸ்ரீமதி G. சியாமளா | ,, | ,, | 100-00 |
| | ஸ்ரீ G. இளங்கோ | ,, | ,, | 100-00 |
| 28-10-78 | ஸ்ரீ S. R. சிவராமகிருஷ்ணன் | கம்பம் | மதுரை ஜில்லா | 1 001-00 |
| | ஸ்ரீமதி N.K.R. லோகமணி அம்மாள் | காமயக்கவுண்டன்பட்டி | ,, | 501-00 |
| | ஸ்ரீமதி சின்னநாச்சியார் அம்மாள் | காமயக்கவுண்டன்பட்டி | ,, | 501-00 |
| | ஸ்ரீ T.K.S. கருணாகரன் தேவகி | கம்பம் | ,, | 500-00 |
| | ஸ்ரீ A.B.K. திருப்பதிகவுடர் | கூடலூர் | ,, | 500-00 |
| | ஸ்ரீ R. கன்னையா | கம்பம் | மதுரை ஜில்லா | 500-00 |
| | ஸ்ரீமதி A.D.J. தர்மாம்பாள் | நாகப்பட்டினம் | தஞ்சைஜில்லா | 200-00 |
| | ஸ்ரீமதி S.L.K.K. ஞானம்பாள் | K. புதுப்பட்டி | மதுரைஜில்லா | 151-00 |
| | சிப்பந்திகள் காந்திநர்சரி பிரைமரிபள்ளி | காமயக்கவுண்டன்பட்டி | ,, | 111-00 |
| | M/s. S.T. பாலசுப்பிரமணியன் செட்டியார் &Sons., | ,, | ,, | 101-00 |
| | ஸ்ரீ A. சவுந்தரபாண்டியன் | இஸ்மாயில்புரம் | ,, | 101-00 |
| | M/s. கம்பம் பிளாஸ்ட் தொழிற்சாலை | விருதுநகர் | ராமநாதபுரம் ஜில்லா | 101-00 |
| | ஸ்ரீமதி S.L.K.R.D. விசாலாக்ஷி அம்மாள் | K. புதுப்பட்டி | மதுரைஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ S. L. K. K. ரகுபதி | ,, | ,, | 101-00 |
| | ஸ்ரீமதி S.L.K.R. சீதாலக்ஷ்மி அம்மாள் | ,, | ,, | 101-00 |
| | ஸ்ரீமதி N.K.R. ரத்தினம்மாள் | காமயக்கவுண்டன்பட்டி | ,, | 101-00 |
| | ஸ்ரீமதி மதுரை தாயம்மாள் | ,, | ,, | 101-00 |
| | ஸ்ரீ V. சுருளிசிக்கையன் | ,, | ,, | 101-00 |
| | ஸ்ரீ R. பரதராஜ் | ,, | ,, | 100-00 |
| 31-10-78 | ஸ்ரீ E. B. A. சுப்பிரமணி | ,, | ,, | 500-00 |
| | ஸ்ரீ R. சச்சிதானந்தம் | ,, | ,, | 101-00 |
| | ரூ. 100க்குக் கீழ் வந்த நன்கொடை மொத்தம் | | ரூ. | 982-00 |

ஆக மொத்தம் ரூ. 34 970-23









# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.


| சக்கரம் 27 | காளயுக்தி ஹு கார்த்திகை மீ | ஆரம் 11 |
|---|---|---|


## பிரார்த்தனை

महेशं सुरेशं सुराराति नाशं विभुं विश्वनाथं विभूत्यङ्गभूषम् ।
विरूपाक्षमिन्द्वर्कवह्नित्रिनेत्रं सदानन्दमीडे प्रभुं पञ्चवक्त्रम् ॥

— शङ्कराचार्यः

மஹேசம் ஸுரேசம் ஸுராராதி நாசம்
விபும் விச்வநாதம் விபூத்யங்கபூஷம்
விரூபாக்ஷ மிந்த்வர்க வஹ்நித்ரிநேத்ரம்
ஸதானந்தமீடே ப்ரபும் பஞ்சவக்த்ரம்

— சங்கராச்சார்யர்

ஆனந்தனும், ஐந்து முகங்களை உடையவனும், மகாதேவனும், பகைவர்களை அழிப்பவனும், எங்கும் வியாபித்திருப்பவனும், விஸ்வநாதனும், நீறுபூசியவனும், முக்கண்ணனுமாகிய பிரபுவை வணங்குகிறேன்.

மோனந் தருஞான மூட்டி யெனக்குவட்டா
ஆனந்த வாழ்க்கை யருளாய் பராபரமே.

— தாயுமானவர்

# அருள் விருந்து

பொருளற்ற வாழ்வு மரணத்திற்கு நிகர்.

நல்லவன் கோழையல்ல; கோழை நல்லவனல்ல.

அன்புக்கு இணங்குவது ஆதிக்கத்துக்கு இணங்காது.

வாழ்வு என்னும் நதி அல்லும் பகலும் போய்க்கொண்டே இருக்கிறது.

பிறர் நம்மை ஏமாற்றமுடியாது. நம்மை நாமே ஏமாற்றிக்கொள்ளுகிறோம்.

அருள் நாட்டம் உடையவர் கால வசதியை எதிர்பார்த்துக் காத்திருக்கலாகாது.

தீங்கில் ஈடுபடுபவன் தீங்கு துயரத்தை விளைவிக்கும் என்பதைக் கண்டுகொள்வான்.

சிந்தித்துப் பார்க்காது பிறர்போக்கைப் பின்பற்றுபவன் போலி மனிதன் ஆவான்.

அன்பிலும் உண்மையிலும் ஊன்றியிருப்பவன் எதையும் சாதிக்க வல்லவனாகின்றான்.

உடலைக் குப்பை எனக் கருதுவது மரணத்தை வெல்லுவதற்கு உற்ற உபாயமாம்.

ஒருவன் உள்ளத்தில் விவேகம் என்னும் விளக்கு ஏற்றி வைப்பது சிறந்த கொடையாம்.

பொது நலனை முன்னிட்டு சுயநலனைப் பின்னணிக்குத் தள்ளுபவன் பெருமகன் ஆவான்.

தீவினைப் பயனினின்று தப்பித்துக்கொள்ள முயலுவது பெரிதன்று. தீவினையினின்று விலகியிருப்பதே மேன்மை.

பிரார்த்தனைக்குப் பிறகு ஒருவன் மேலோனாகத் திகழுவானாகில் அவன் நன்கு பிரார்த்தனை பண்ணியவன் ஆகின்றான்.

தன்னை ஆண் என்றோ பெண் என்றோ கருதாது ஊக்கத்துடன் இருப்பவன் ஆத்ம சாதனத்துக்குத் தகுதியுடையவன் ஆகிறான்.

பாபிக்கும் பண்பட்டவனுக்கும் இடையிலுள்ள வேற்றுமை யாது? முன்பு பாபியாயிருந்தவன் இப்பொழுது பண்பட்டு இருக்கிறான். இப்பொழுது பாபியாயிருப்பவன் இனிப் பண்படுவான்.

## பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

பரமஹம்சதேவர் பக்தர்களோடு தொடர்ந்து உரையாடிக்கொண்டிருக்கிறார். அவர் பகர்ந்ததாவது: ''பாவசமாதியில் பக்தன் ஒருவன் நெடுநேரம் இருக்க முடியாது. முகம் பார்க்கும் கண்ணாடியின் எதிரே மானுடனொருவன் அமர்ந்துகொண்டு நெடுநேரம் தன் முகத்தின் பிம்பத்தைப் பார்த்த வண்ணமாயிருப்பானாகில் அன்னவனை ஒரு கிறுக்கன் என்று உலகத்தவர் பொருள்படுத்துவர். பக்தனுக்கு வாய்க்கிற பாவசமாதி சிறிதுநேரத்தில் தானாகப் பின்னணிக்குப் போகிறது.''

பக்தர் ஒருவர்: ''ஐயனே! தாங்கள் கடவுள் காட்சியைப் பெறுகிறீர்கள் என்று நாங்கள் கேள்விப்படுகிறோம். அது அங்ஙனமாயின் அவரை எங்களுக்கும் காட்டித் தருவீர்களாக.''

பரமஹம்சதேவர்: ''அது கடவுளின் திருவுளத்தைச் சார்ந்திருக்கிறது. மனிதனால் செய்யக்கூடியது யாது உளது? கடவுளின் திருநாமத்தை உச்சரிக்கின்றபொழுது சில வேளைகளில் கண்ணீர் சொட்டுகிறது. வேறு சிலவேளைகளில் கண்கள் உலர்ந்திருக்கின்றன. கடவுளைப்பற்றித் தியானம் பண்ணுகிறபொழுது சில நாட்களில் ஆத்மபோதம் தலையெடுப்பதை அனுபவத்தில் நான் காண்கிறேன். வேறு சில நாட்களில் அத்தகைய பேருணர்வு என் உள்ளத்தில் உருவெடுப்பதில்லை.

''மானுடனொருவன் உழைக்கக் கடமைப்பட்டிருக்கிறான். அப்பொழுதுதான் கடவுள் காட்சி அவனுக்கு வாய்க்கும். ஒருநாள் ஆனந்தபரவசம் அடைந்திருந்தபொழுது எனக்கு ஹல்தார்புகூரின் காட்சி வாய்ப்பதாயிற்று. கீழ்க்குலத்தைச் சேர்ந்த கிராமவாசி ஒருவன் அக்குளத்தின் மேல்பரப்பில் படிந்திருந்த பாசியை ஒதுக்கித் தள்ளிவிட்டு நீர் எடுப்பதை நான் பார்த்தேன். இடையிடையே தன்கையில் நீரை அள்ளி எடுத்து அதைச் சோதித்துப் பார்த்தான். அக்காட்சியில் உண்மை ஒன்று எனக்கு விளக்கப்பட்டது. மேலே மூடிக்கொண்டிருக்கிற பாசியை நீக்கினாலொழிய கீழே இருக்கின்ற நீர் காட்சிக்கு எட்டாது. அதே பாங்கில் மானுடனொருவன் தனக்கு வாய்த்துள்ள கடமையை முறையாக ஆற்றாவிட்டால் கடவுள் பக்தியோ கடவுள் காட்சியோ அவனுக்கு வாய்க்கமாட்டாது. மானுடனொருவன் தனக்கு ஏற்பட்டுள்ள கடமைகளை முறையாக நிறைவேற்றுவானாகில் அது கடவுள் தியானத்துக்கும் ஜபத்துக்கும் நிகராகிறது. பகவானுடைய திருநாமத்தையும் மகிமைகளையும் குறித்துப் பாடுவதும், ஓதுவதும் மனிதனுக்கு அமைந்துள்ள கடமைகளாகின்றன. அதே விதத்தில் பொருத்தமாகத் தானம் பண்ணுவதும், வழிபாடு நிகழ்த்துவதும், வேள்வி வேட்பதும் மனிதனுக்கு அமைந்துள்ள கடமைகளாகின்றன.

''வெண்ணெயைப் பெறுவதற்கு உபாயம் ஒன்று உண்டு. பாலைக் காய்ச்சி ஆறவைத்து உறை ஊற்றவேண்டும். பிறகு அதை அமைதியாக ஒரு இடத்தில் வைத்திருக்கவேண்டும். அமைதியாக வைத்திருந்தால்தான் அது நல்ல தயிராக உறையும். உறைந்த தயிரை அதிகாலையில் கடையவேண்டும். அப்படிச் செய்தால் பாலினின்று வெண்ணெயை நல்லபாங்கில் பிரித்தெடுக்கிறோம். கடவுள் வழிபாடு அத்தகையது. தக்க சாதனங்களை முறையாகக் கையாண்டால் தெய்வத்தின் அருளுக்கு நாம் தகுதி உடையவர் ஆகின்றோம்.''

மகிமசரண்: ''ஐயனே! தாங்கள் பகருவது முற்றிலும் மெய். அவரவருக்கு ஏற்பட்டுள்ள கடமைகளைக் கண்ணும் கருத்துமாக நிறைவேற்றுவது அவசியம். பேருக்கத்துடனும் பேருழைப்புடனும் ஒவ்வொருவனும் அவனவன் கடமையை நிறைவேற்றவேண்டும். அப்பொழுதுதான் வாழ்க்கையில் ஒருவன் வெற்றியடைகிறான். வாசித்து அறிந்துகொள்ளுதற்கு விஷயங்கள் ஏராளமாய் இருக்கின்றன. சாஸ்திரங்களுக்கோ முடிவு கிடையாது.''

பரமஹம்சதேவர் (மகிமசரணைப் பார்த்து): ''சாஸ்திரங்களுள் எவ்வளவைப் படித்து முடிக்க உமக்கு இயலும்! அவைகளைக்

குறித்து விவாதிப்பதால் உமக்கு அமையும் பயன் யாது? மற்றவைகளையெல்லாம் பற்றி முயற்சி எடுத்துக்கொள்ளுதற்கு முன்பு ஈஸ்வ ரானுபூதியைப் பெற முயல்வீராக. குரு வாக்கி யங்களில் விசுவாசம் வைத்திருப்பீராக. அந்த வாக்கியங்களுக்கேற்ப வினையாற்றிக் கொண் டிருப்பீராக. உமக்குக் குரு ஒருவர் இன்னும் அமையவில்லை யென்றால் அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். இறைவனிடத்துப் பேரார்வத்துடனும் அருள் தாகத்துடனும் பிரார்த்தனை பண்ணுவீராக. இறைவன் தாமே தம்முடைய சொரூபம் எத்தகையது என்பதை உமக்குக் காட்டியருள்வார்.

"வெறுமனே புஸ்தகங்களைப் படிப்பதால் கடவுளைப்பற்றித் தாம் என்னதான் அறிந்து கொள்ள முடியும்? சந்தைக்கடைக்குத் தூரத் திலே நின்று கொண்டிருக்கிற ஒருவனுக்குத் தெளிவற்ற வெறும் ஓசைதான் சதா காதில் வந்து விழுந்து கொண்டிருக்கும். ஆனால் சந்தைக்கடைக்குள்ளே ஒருவன் நுழைந்து விட்டால் நிலைமை வேறு ஒரு விதமாக வடி வெடுக்கும். ஆங்கு நிகழ்கிற விற்பது வாங்கு வது ஆகிய வியாபாரங்கள் தெளிவுறக் காதில் படும். இன்னின்ன பொருள்களின் விலை இத் தகையது என்பதெல்லாம் தெளிவுறக் காதில் படும். வெறும் நூல் ஆராய்ச்சி சந்தைக் கடைக்கு எட்ட நின்று கொண்டு அதன் ஓசை யைக் கேட்பதற்கு நிகர். ஆனால் இறைவனு டைய அருளைப் பெற்றவன் நிலை வேறானது. அது சந்தைக்கடைக்குள் உள்ளே நுழைந்து நேராக நிகழ்வனவற்றைக் கேட்பதற்கு நிகரா கும்.

"எட்ட இருந்து கேட்கிறபொழுது சமுத் திரத்தினின்று மெல்லிய ஓசை மட்டும் காதுக்கு எட்டுகிறது. ஆனால் பக்கத்தில் போய்ப் பார்த் தால் படகுகள் இங்குமங்கும் போவதையும், பறவைகள் நாலாபக்கம் பறப்பதையும், பேரலை கள் உருண்டோடிக் கரையில் மோதி, தடால் என்று சப்தமிடுவதையும் கேட்கலாம்."

"வெறும் புஸ்தகங்களைப் படிப்பதால் ஆத்ம சாதகன் ஒருவனுக்கு உண்மையான தெய்விக உணர்ச்சி உண்டாவதில்லை. புஸ்தகப் படிப்பு வேறு, பாரமார்த்திக உணர்வு வேறு. ஈசனை அனுபவதின் விளைவாக உண்டாகின்ற ஆனந் தப் பரவசத்தோடு சீர்தூக்கிப் பார்த்தால் புஸ்தகங்களும், சாஸ்திரங்களும், பௌதிக விஞ்ஞான ஆராய்ச்சிகளும் பொருளற்ற குப்பைகளாகவும் தூசிகளாகவும் தென்படும்.

"வீட்டுக்குச் சொந்தக்காரனோடு அறிமுகப் படுத்தி வைப்பது முற்றிலும் அவசியம். அப் படி வீட்டுக்காரனோடு அறிமுகப்படுத்தி வைப் பதற்கு முன்பே அந்த வீட்டுக்காரனுக்கு வீடு கள் எத்தனை; தோட்டங்கள் எத்தனை; பணம் எவ்வளவு படைத்திருக்கிறான் என்பதைப் பற்றிய எண்ணங்களெல்லாம் உருவெடுக்க வேண்டியதவசியமில்லை. அந்த வீட்டுக்குரிய சொத்துக்களைப் பற்றி ஆராய்ச்சி பண்ணுவ தற்கும் கூட வேலையாட்கள் அனுமதிக்கமாட் டார்கள். ஆதலால் வீட்டுத் தலைவனோடு இணக்கம் வைப்பது முதல் கடமை. அப்படி இணக்கம் வைப்பதற்கான முயற்சிகளை முத லில் எடுத்துக்கொள்ளவேண்டும். வேலையாட் களுடைய தடைகளையும் சமாளித்துக்கொண்டு வீட்டுத் தலைவனைச் சென்று பார்க்கவேண்டும். அவனோடு இணக்கம் அமைந்துவிட்டால் பிறகு நிலைமை அடியோடு மாறியமைகிறது. தன்னைப் பற்றிய விபரங்களனைத்தையும் வீட்டுத் தலை வனே விரிவாக எடுத்து விளக்குவான். தனக் குரிய சொத்து சுகங்களைப்பற்றி அவன் தானே சொல்லக் கேட்பதுதான் பொருத்தமானது. மற்றும் ஓர் அதிசயம். வீட்டுத்தலைவன் பக்கத்தில் போகக்கூடாது என்று முதலில் ஆட்சேபம் செய்த ஆட்கள் பின்பு வணக்கம் செலுத்தி வரவேற்பார்கள். (இதைக்கேட்டு எல்லாரும் நகைக்கிறார்கள்.) வீட்டுத் தலைவ னோடு இணக்கம் வைப்பதற்கு நிகர் தெய்வ பக்தி பூணுவது. தெய்வத்தின் அருளுக்குப் பாத்திரமாகிற ஒருவனுக்குப் பரதத்துவமும், பிரபஞ்ச தத்துவங்களும் உள்ளங்கை நெல்லிக் கனி போன்று விளங்குகின்றன."

பக்தர்: "வீட்டுத் தலைவனோடு இணக் கத்தை உண்டுபண்ணுவது எப்படி? என் பதுதான் இப்பொழுது எழுகிற கேள்வி." (எல்லாரும் நகைக்கிறார்கள்.)

பரமஹம்சதேவர்: "ஆகையினால்தான் சாத னங்கள் புரிவது முற்றிலும் அவசியம். கடவுள் இருக்கிறார் என்று வெறும் வாய்ப்பேச்சுப் பேசிக்கொண்டு வீண்பொழுது போக்குவது

ஒவ்வாது. ஏதேனும் ஒரு சாதனமுறையைக் கையாண்டு இறைவனோடு இணக்கம்வைப்பது முற்றிலும் அவசியம். ஏகாந்தத்திலிருந்து கொண்டு இறைவனைக்கூவி அழைத்தல் வேண்டும். மேலும் அவரிடத்துப் பிரார்த்தனைபண்ண வேண்டும். 'இறைவா! உன்னுடைய சொரூபத்தை எனக்குக் காட்டியருள்வாயாக' என்று கண்ணீரும் கம்பலையுமாக விண்ணப்பிக்க வேண்டும். உள்ளக் கசிவுடன் அவரை நாடி அழுதல் வேண்டும். காமத்தாலோ, காசு ஆசையாலோ தூண்டப்படுகிற மாந்தன் ஒருவன் பைத்தியம் பிடித்தவன் போன்று தன்னுடைய ஆசையை நிறைவேற்றப் பாடுபடுகிறான். அழிந்துபட்டுப் போகிறவைகளைக் குறித்தும் தன்னை அழித்துத் தள்ளுபவைகளைக் குறித்தும் அவன் பைத்தியம் பூணுகிறான். அதே பாங்கில் ஆத்மசாதகன் பரமனுடைய நாட்டத்தில் பைத்தியம் பூணவேண்டும். 'இப்பெயர்வழி பரநாட்டத்தில் வரம்பு கடந்து போய்ப் பைத்தியம் பிடித்துத் திரிகிறான்' என்று உலகத்தவர்கள் இயம்பிக் கொண்டிருக்கட்டும். ஏதோ சில நாட்களுக்காவது உலகத்துக்குரிய சொத்துச் சுகங்களையெல்லாம் அறவே மறந்துவிட்டுக் கடவுள் நாட்டத்திலேயே மானுடனொருவன் ஏகாந்தத்தில் ஏன் இருக்கலாகாது?

"கடவுள் நம்பிக்கை பூண்டிருப்பது போதும் என்று ஒரு சிலர் கருதுகின்றனர். அப்படிக் கருதுவதோடு அவர்களுடைய அலுவல்கள் நின்றுவிடுகின்றன. கடவுளை அடைவதற்கான முறைகளை அன்னவர்கள் கையாளுவதில்லை. இத்தகைய அரைகுறையான கொள்கையினின்று வாய்ப்பதுதான் யாது? ஹலதார்புகூர் என்னும் குளத்தில் பெரிய மீன்கள் இருக்கின்றன. அக்குளக்கரையில் சோம்பலுற்று வெறுமனே உட்கார்ந்திருக்கும் மானுடனொருவன் அக்குளத்திலிருக்கும் மீன்களைப் பிடிக்க வல்லவனாவானா? ஆகமாட்டான். தக்கமுறையில் தூண்டிலைத் தயார்படுத்தி அக்குளத்தினுள் அவன் அதை வீசவேண்டும். அப்படிச் செய்தால் ஆழத்திலிருக்கும் மீன்கள் மேலே வரும். அப்படி அவைகள் வருகிறபொழுது நீரில் சுழல்கள் உண்டாவதைக் காண்பான். அன்னவனுக்கு மகிழ்வு உண்டாகும். மீன்களில் ஒன்று 'பளிச்' சென்று தாவித் தூண்டிலைக் கவ்வும். மீன் பிடிப்பவன் காட்சிக்கு அது தென்படும். அவன் மகிழ்வு மிக எய்துவான். அவனுடைய செயலுக்கு நிகரானது ஆத்ம சாதகனுடைய செயல். புறவுலகைப்பற்றியோடுகிற மனதை அவன் அந்தர்முகமாகத் திருப்பி ஜபம், தியானங்களில் ஈடுபடுகிறான். தொடர்ந்து ஊக்கத்துடன் ஆத்ம சாதனங்கள் புரிகின்றவன் தன் உள்ளத்தினுள்ளே ஈசனுடைய சாந்நித்தியத்தைக் காண்பான். அதற்கு வெறும் கடவுள் நம்பிக்கை போதாது. கடவுள் நாட்டம் ஒன்றே கடவுளை அடைய உற்ற உபாயமாகும்.

"கொதிக்க வைத்த பாலை ஆறவைத்துத் தயிராக மாற்ற வேண்டும். அத்தயிரைப் பிறகு கடைந்தெடுக்க வேண்டும். அப்படிச் செய்தால்தான் வெண்ணெய் அகப்படும். (மகிம சரணைப் பார்த்து) என்ன விந்தை! மானுடனொருவன் செயலற்று வெறுமனே உட்கார்ந்து கொண்டிருக்கின்றான். அன்னவனுக்குக் கடவுள் காட்சியைப் பெற்றுள்ள வேறொருவர் கடவுள் காட்சியைக் காட்டித் தரவேண்டுமாம். மற்றொருவர் வெண்ணெயைக் கடைந்தெடுத்து வாயில் ஊட்டவேண்டுமாம்! (எல்லாரும் நகைக்கின்றனர்) கடவுளைக் காட்டித்தாரும் என்று வேண்டுபவர்கள் பலர் இருக்கின்றனர். அன்னவர்களுக்கு விடை கொடுப்பதே ஓயாத தொல்லையாக இருக்கிறது. அவரவர் முயன்று அனுபவிக்கின்ற ஆத்மானுபூதியைப் பிறர் எடுத்து வழங்குவது எங்ஙனம்? சிரத்தையில்லார்க்கு இக்கோட்பாடு விளங்காது.

"மானுடனொருவன் அரசனைக் காண விரும்பினான். அரசனோ தன் மாளிகையின் உள் மண்டபத்தில் வீற்றிருந்தான். அம்மண்டபத்துக்கு ஏழு வாயில்கள் அமைக்கப்பெற்றிருந்தன. முதல் வாயிலைத் தாண்டி உள்ளே சென்ற மானுடன் 'அரசன் எங்கே?' என்று கேட்டான். இன்னும் ஆறு வாயில்களைத் தாண்டி அவன் உள்ளே போகவேண்டியிருந்தது. அரசனைக் காண்பதற்கு நிகர் பகவானைக் காண்பது. மானுட சரீரம் என்னும் மாளிகையின் ஆறு ஆதாரங்களைத் தாண்டி ஆத்ம சாதகன் ஏழாவது ஞானபூமிக்கு உள் நோக்கிச் செல்லவேண்டும்."

# பராபரக் கண்ணி

( தாயுமானவர் இயற்றியது )

866. உன்னு வெளியாய்
உறங்காத பேருணர்வாய்
என்னுவிக் குள்ளே
இருந்தாய் பராபரமே.

ஆத்மசொருபம் சேதனம். அனுத்மா ஜடம். இவ்விரண்டையும் பாகுபடுத்துதலில் சிரமம் இல்லை. வீடு ஒன்று இருக்கிறது. அதில் மானுடன் ஒருவன் வசித்திருக்கிறான். வீட்டில் வசித்திருக்கின்ற மனிதன் 'நான் இருக்கிறேன்' என்ற உணர்வு படைத்திருக்கிறான். அந்த உணர்வு வீட்டிற்கு இல்லை. இக்கோட்பாடு ஜீவாத்மாவுக்கு உரியதாகிறது. உடலைத் தன்மயமாக அபிமானித்திருப்பவன் ஜீவாத்மன். இந்த உடல் எனக்குரியது என்று அவன் அபிமானிக்கிறான். அத்தகைய பாங்கு உடலுக்கு இல்லை. ஏனென்றால் பூதங்களாலாகிய ஜடவஸ்துவாக அது இருக்கிறது. உன்னுதல் என்னும் செயல் மனதுக்குரியது. மனமோ உடலின் சூட்சும நிலையாம். சூட்சும தேகம் உள்ளம் எனப்படுகிறது. ஸ்தூல தேகம் உடல் எனப்படுகிறது. உடல் முற்றிலும் ஜடமாயிருக்கிறது. உள்ளமோ ஆத்ம சேதனத்தைப் பிரதிபிம்பித்துக்கொண்டிருக்கிறது. இதற்கு உபமானம் ஒன்று தேவை. சூரியன் சுயப்பிரகாசம் உடையது. சந்திரனே சூரியனிடத்திருந்து ஏற்றுக்கொண்ட பிரகாசத்தைப் பிரதிபிம்பித்துக்கொண்டிருக்கிறது. உள்ளம் அல்லது மனது சுயப்பிரகாசம் படைத்ததன்று. ஆத்மப்பிரகாசத்தைத் தனக்குரியதுபோன்று அது விளக்கிக்கொண்டிருக்கிறது. சேதனம் போன்று தென்படுகின்ற ஜடவஸ்து மனது எனப்படுகிறது. இரவல் வாங்கிய வெளிச்சத்தால் அது தன்னை விளக்குவதால் அதன் விளக்கம் எல்லைக்குட்பட்டதாகிறது. தன்னையும் ஏனைய ஜடவஸ்துக்களையும் அது விளக்குகிறது. தனக்கு ஒளி நல்கிய சூரியனை விளக்க அதற்கு இயலாது. அதேவிதத்தில் உன்னுதல் அல்லது எண்ணுதல் முதலிய செயல்கள் மனதுக்குரியனவாகின்றன. உன்னுகிற மனது ஆத்ம சைதன்யத்தை உன்னவல்லதன்று. மனதின் சலனம் அடங்கியிருக்கிறபொழுது ஆத்மப்பிரகாசத்தை விளக்குவது போன்று அது செயலற்றுக் கிடக்கிறது. இதற்கு மற்றொரு சான்று அவசியம். சூரியனையும், சந்திரனையும் உள்ளபடி பிரதிபிம்பிக்கவல்லது சலனமற்ற ஜலம். அப்படி மனது சலனமற்றிருக்கிறபொழுது ஆத்ம சைதன்யத்தை விளக்குவதுபோன்று அது தென்படுகிறது. அத்தகைய தகைமை மனதிற்கு உண்டு. ஆயினும் அது தானே ஆத்ம சைதன்யமாகாது. ஆத்மசைதன்யமோ மனதில் கட்டுப்படாத அறிவுப் பெருவெளி. ஆதலால் அது உன்ன வெளியென இயம்பப்படுகிறது. பிரகிருதி மயமாயிருக்கிற மனது முக்குணத்தால் ஆக்கப்பெற்றது. அதனிடத்தில் சத்துவ குணம் ஓங்கியிருக்கிறபொழுது ஆத்மப் பிரகாசத்தை விளக்குவது போன்று அது தென்படுகிறது. சலித்துக்கொண்டிருக்கிறபொழுது பலப்பல எண்ணங்கள் மயமாக அது இலங்குகிறது. அப்பொழுது அது ரஜோகுணத்தில் இருக்கிறது. பின்பு தமோகுணத்தில் மூழ்கியிருக்கிறபொழுது அது கார் இருள் மயம். அந்நிலை உறக்கம் எனப்படுகிறது. மனது உறங்குகிறது. ஆத்மா ஒருபொழுதும் உறங்குவதில்லை. உறங்குகிற மனது ஆத்ம சொருபத்தைப் பிரதிபிம்பிப்பதில்லை. ஆதலால் ஜடநிலையிலிருக்கும் அது இல்லாததுபோன்று ஆகிறது. சூரியனுக்கு எங்ஙனம் உதயமும் அஸ்தமனமும் இல்லையோ அங்ஙனம் ஆத்மாவுக்கு உறக்கமும், விழிப்புமில்லை. அது யாண்டும் பேருணர்வாய் இருக்கிறது. பேர் உணர்வாகிய ஆத்மா இடத்தில் அடங்குவதன்று. இடம் அதில் தோன்றி, இருந்து, ஒடுங்குகிறது. நிறைபொருளாகிய ஆத்மா மானுடனுடைய உயிருக்குள்ளே வீற்றிருப்பது போன்று தோன்றுகிறது. உண்மையில் ஆத்ம சைதன்யத்தின் சன்னிதானத்தில் ஆவி அல்லது உயிர்த்தன்மை தனக்குரிய வியக்தியைப் பெறுகிறது. திரையின்மீது படக்காட்சி தென்படுவதுபோன்று அறிவுத்திரை அல்லது சிதாகாசத்தின்மீது ஜீவாத்மாவுக்குரிய உள்ளமும், உயிரும் இடம்பெறுகின்றன. அத்த

கைய உள்ளத்தையும் ஆவியையும் தனக்குரிய வைகள் என அபிமானிப்பது ஜீவாத்மா. இறைவா, உள்ளத்தையோ ஆவியையோ எனக்குரியவைகளாக அபிமானிக்காது நான் என்னும் ஜீவவியக்தியை உன் சொருபத்தில் ஒடுங்கச் செய்து அந்தச் சொருபமே என்னுடைய நிஜநிலை என்னும் பாங்கைப் பெறுவேனாக என்பது இக்கண்ணியின் கருத்து.

367. தத்துவமெல் லாமகன்ற
தன்மையர்க்குச் சின்மயமாம்
நித்தமுத்த சுத்த
நிறைவே பராபரமே.

பிரகிருதிக்குரிய தத்துவங்கள் இருபத்து நான்கு. அவைகள் முறையே ஐம்பூதங்கள், அவைகளின் ஐந்து தன்மாத்திரைகள், ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து, மனம், புத்தி, சித்தம், அகங்காரம். இங்ஙனம் இருபத்து நான்கு தத்துவங்கள் ஆகின்றன. ஆறு சாஸ்திரங்களில் ஒன்றாகிய சாங்கிய சாஸ்திரப்படி தத்துவங்கள் இருபத்துநான்கு. இவைகளையே சமய சாஸ்திரங்கள் முப்பத்தி ஆறு தத்துவங்களாகவும், தொண்ணூற்றாறு தத்துவங்களாகவும் விரிவு படுத்தி இருக்கின்றன. இருப்புப்பாதை வண்டி ஓடுகிற போக்கை விளக்குகிற கால அட்டவணை இருக்கிறது. இந்த அட்டவணையில் சென்னைக்கும் டில்லிக்கும் ஓடுகிற வேகமான வண்டிகளுக்குப் பெரிய பெரிய ஊர்களே நிலையங்களாகக் குறிக்கப்பெற்றிருக்கும். அட்டவணையின் மற்றொருபகுதியில் வழிநெடுக இருக்கும் சிறிய சிறிய நிலையங்கள் நின்று நின்று போகும் பிரயாணிகள் வண்டியின் பொருட்டு விளக்கப்பட்டிருக்கின்றன. சிறிய சிறிய நிலையங்களையும் சேர்த்து விளக்குவதற்கு நிகர் தொண்ணூற்றாறு தத்துவங்கள். தேகம் செல்லுகிற வண்டிக்குரிய பெரிய நிலையங்களை மட்டும் சொல்லுவதற்கு நிகர் இருபத்துநான்கு தத்துவங்கள். இவையாவும் பிரபஞ்சம் அல்லது பிரகிருதியின் கூறுகளாகின்றன. வானத்தில் படலம் படலமாக மேகங்கள் சூழ்ந்திருக்கின்றன. அவை யாவையும் ஒன்றினுள் ஒன்றாக நீக்கினால் எஞ்சியிருப்பது ஆகாசம் அல்லது வெட்டவெளி. அதை அப்புறப்படுத்த யாருக்குமே இயலாது. அகண்டமாயிருப்பதை நீக்க முடியாது என்பதற்கு ஆகாசமே சான்று ஆகிறது. அதே பாங்கில் ஜீவாத்மசொருபத்தைப் பிரகிருதிக்குரிய இருபத்துநான்கு தத்துவங்கள் மூடிக்கொண்டிருக்கின்றன. இந்தத் தத்துவங்களையெல்லாம் ஒதுக்கித் தள்ளினால் ஜீவாத்மன் என்னும் உபாதியும் அதைவிட்டு அகன்றுபோகிறது. உபாதிகளோடு இணைந்திருக்கும் காலமெல்லாம் ஜீவாத்மனுக்கு ஜீவாத்ம வியக்தியுண்டு. தத்துவங்கள் மயமாயிருக்கும் உபாதிகளை ஒதுக்குமிடத்து எஞ்சியிருப்பது சித்சொருபம். சுத்த சைதன்யமென்றும் அது இயம்பப்படுகிறது. சுத்த சைதன்யத்தைத் தெளிவுபடுத்துவதற்கு இயற்கையில் சான்று ஒன்று எடுத்துக்கொள்ளுவோம். பூமியில் படிந்துள்ள நீர் வகைகள் ஆற்றுநீர் என்றும், கிணற்றுநீர் என்றும், குளத்து நீர் என்றும், கடல் நீர் என்றும் அழைக்கப்படுகின்றன. ஒவ்வொரு நீரும் அதற்குரிய உபாதியோடு கூடியிருக்கிறது. இந்த நீரில் ஏதேனும் ஒன்றை எடுத்து ஆவியாக மாற்றி மறுபடியும் உறையச் செய்தால் அது சுத்தஜலம் ஆகிறது. வானத்தில் இருந்து வரும் மழை நீருக்கும் இந்தச் சுத்த ஜலத்துக்கும் வேற்றுமையில்லை. அங்ஙனம் ஜீவாத்மன் தன்மீது ஆரோபித்துக்கொண்டுள்ள தத்துவங்களையெல்லாம் ஒதுக்கித் தள்ளினால் எஞ்சியிருப்பது சுத்த சைதன்யம். அது சித் என்னும் பெயர் பெறுகிறது. அதற்கு ஆதி அந்தம் இல்லாததனால் அது நித்தியவஸ்து. யாண்டும் இருந்தபடி அது இருக்கிறது. வேறு எப்பொருளோடும் அதைத் தளைக்க முடியாது. ஆதலால் அவ்வஸ்துவானது முக்திநிலையில் நிலைத்திருக்கிறது. இரண்டாவது பொருள் வந்து அதை மலினப்படுத்த முடியாதது. ஆதலால் அது சுத்தவஸ்துவாக இருக்கிறது. ஐம்பூதங்களுள் ஆகாசம் எங்கும் வியாபித்திருப்பதால் அது நிறைபொருள். அதே போன்று சித் ஆகாசம் அறிவுப் பெருவெளியாய் நிலைத்திருக்கிறது. அக்காரணத்தை முன்னிட்டு அது பூரணம் என்று போற்றப்படுகிறது. ஜீவாத்மன் தனக்குத்தானே அமைத்துக்கொண்டிருக்கும் தத்துவங்களை ஒதுக்கித் தள்ளுவது வாழ்க்கையின் குறிக்கோள் என்பதை இக்கண்ணி விளக்கிக்காட்டுகிறது.

# பரபோதம்

(ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருட்செல்வரான சுவாமி பிரம்மானந்தரின் போதனை)

தெய்வத்தின் பெயர்களெல்லாம் மந்திரங்கள் ஆகின்றன. குரு சாதகனுடைய மன இயல்பை அறிந்து அவன் மன இயல்புக்கு ஏற்ற இஷ்ட தெய்வத்தின் மந்திரத்தை அவனுக்கு உபதேசம் செய்கின்றார். சாதகன் குருவிடம் உபதேசமாகப் பெற்ற மந்திரத்தைப் பிரார்த்தனையின் பொழுதும், தியானத்தின் பொழுதும் உச்சரித்து வரலாம். மந்திரத்தைத் திரும்பத் திரும்ப உச்சரிப்பதை ஜபம் என்கின்றோம். மந்திரத்தை எத்தனைமுறை உச்சரிக்கிறோமோ அவ்வளவுக்கும் நல்லது. மந்திர ஜபம் செய்து வர வரத் திரு ஓங்குகிறது. 'உரு ஏறத் திரு ஏறும்' என்பது அருள்மொழி.

எல்லாத் தெய்வங்களினுடைய மந்திரங்களும் சக்தி வாய்ந்தவை. எந்தத் தெய்வத்தின் மந்திரத்தை உச்சரித்தாலும் முன்னேற்றமடையலாம். தெய்வங்களுக்கிடையில் உயர்வு தாழ்வு இல்லை. அஃதே போன்று மந்திரங்களுக்கிடையிலும் உயர்வு தாழ்வு இல்லை. தெய்வங்களைப் பல பெயர்கள் கொண்டு அழைப்பதன் மூலம் தெய்வங்களுக்கிடையில் பிரிவினையை உண்டுபண்ணிக் கொள்கின்றோம். ஆனால் பரம்பொருள் எல்லாத் தெய்வங்களின் நாமங்களிலும் இருக்கின்றார். எந்தத் தெய்வத்தின் நாமத்தை உச்சரித்தாலும் தெய்வீக சக்தி உச்சரிப்பவருக்கு வருகிறது.

மெய்ப்பொருள் ஒன்றுதான். அம்மெய்ப்பொருளை ரிஷிகள் பல பெயர்கள் இட்டு அழைக்கின்றனர். அகண்ட பொருளாக இருக்கின்ற மெய்ப்பொருளை யாரும் கண்டப்படுத்த முடியாது. சர்வசக்திமானாகவும், சர்வவியாபியாகவும், சர்வக்ஞனாகவும், பேரன்பு சொரூபினனாகவும் இருக்கின்ற மெய்ப்பொருளை யாரும் பின்னப்படுத்த முடியாது. அவருக்கு அந்நியமாக எப்பொருளும் இல்லை. ஆனால் அவர் பல வடிவங்களில் பல இயல்புகளோடு விளங்குகிறார். அவருக்குப் பல விளக்கங்களும் அமைந்திருக்கின்றன. தெய்வத்துக்கு அமைந்துள்ள எல்லா விளக்கங்களும் பரம்பொருள் ஒருவரைத்தான் விளக்குகின்றன. கடவுளுக்கு வடிவங்களும், நாமங்களும் ஏராளமாக அமைந்திருக்கின்றன. ஒவ்வொரு வடிவத்துக்கும் உரிய ஓசை உண்டு. அவ்வோசைதான் அவ்வடிவத்துக்குப் பெயராக அமைந்திருக்கிறது. ஞானிகளும், யோகிகளும் உள்முகமாக ஆழ்ந்து சென்று மெய்ப்பொருள் தரிசனம் பெற்றார்கள். அவர்கள் பெற்ற ஆத்மீக அனுபவத்திலிருந்து தெய்வங்களின் வடிவங்களும், நாமங்களும் தோன்றின.

குருவிடமிருந்து பெறுகின்ற மந்திரம் சக்தி வாய்ந்தது என்று இந்துக்கள் நம்புகின்றனர். நம்மிடத்திலுள்ள தெய்வ சக்தியைக் குரு மந்திரத்தை உபதேசிப்பதன் மூலம் விழித்தெழச் செய்கின்றார். குருவிடமிருந்து மந்திர உபதேசம் பெறுவது அருட்சக்தியைப் பெறுவதற்குத் தூண்டுதல் கொடுக்கிறது என்று இந்துக்கள் நம்பி வருகின்றனர். மனிதனிடத்தில் தெய்வீகத் தன்மை மறைந்து கிடக்கின்றது. ஜபம் செய்வதன் மூலம் அம்மந்திர சக்தியை விழித்தெழச் செய்யலாம். கடவுள் தன்மையைத் தியானத்தின் மூலம் நம் உள்ளத்தில் பதியச் செய்யலாம். கடவுளின் எத்தன்மையை ஒருவன் தியானிக்கின்றானோ அத்தன்மையை விளக்கும் கடவுள் வடிவம் அவனுக்குரிய இஷ்ட மூர்த்தி ஆகின்றார். இஷ்ட மூர்த்தியின் வடிவத்தை வழிபாட்டுக்கு வைத்துக் கொண்டு முறையாக வழிபாடு செய்து வரலாம்.

ஈண்டு ஸ்ரீவிவேகானந்தர் கூறியதைக் குறிப்பிடுவது அவசியம். அவர் பகர்ந்துள்ளதாவது: "ஒவ்வொரு மதப்பிரிவினரும் கடவுளின் ஒரு தன்மையைத்தான் மக்களுக்கு வழங்குகின்றனர். ஆனால் வேதாந்த மதம் கடவுளின் எல்லாத் தன்மைகளையும் மக்களுக்கு வழங்குகிறது. எண்ணற்ற வழிமுறைகளையும் வேதாந்த மதம் மக்களுக்குக் கொடுத்திருக்கிறது. அவ்வழிமுறைகளைப் பின்பற்றி மனதை உள்முகமாகச் செலுத்தி உள்ளிருக்கின்ற ஆத்ம சொருபத்தை அறியலாம். எல்லாருடைய உள்ளங்களிலும் இருக்கின்ற நித்தியப் பொருள் ஒன்றுதான். ஒரு பொருள் தம்மைப் பலவிதமாக விளக்கிக்காட்டுகின்றார். அருள்

நாட்டமுடைய மக்களுக்குப் பலவழிமுறைகளை வேதாந்தம் தந்திருக்கிறது. மானுட வாழ்வின் இலட்சியத்தை அடைய உறுதியான உள்ளம் வேண்டும். பக்தர்களும், ஞானிகளும் பாரினில் தோன்றிப் பாரமார்த்திக நெறிகளை மக்களுக்குக் காட்டித் தந்துள்ளார்கள். கற்பாறையைக் குடைவதுபோன்று பாரமார்த்திக நெறி கடினமானது. பெருமக்கள் அப்பாரமார்த்திக நெறியினுள் புகுந்து உண்மையை அறிந்திருக்கின்றார்கள். அன்றும் இன்றும் என்றும் மக்களுக்குப் பயன்படக்கூடிய பாரமார்த்திக நெறிகள் பண்புடைய அப்பரமாச்சாரியர்களால் தெளிவாகக் காட்டப்பட்டிருக்கின்றன. அப்பாரமார்த்திக நெறிகள் மக்களைக் கைகூப்பி அழைத்துக் கொண்டிருக்கின்றன. நதிகள் கடலைநோக்கிச் சென்று கடலில் சங்கமமாவது போன்று அப்பாரமார்த்திக நெறிகள் பரத்தை நோக்கிச் சென்று பரத்திடம் லயமாகிவிடுகின்றன. பேரின்பவாரியில் அப்பாரமார்த்திக நெறிகள் மக்களைக் கொண்டுசேர்க்கின்றன. பந்தப்பட்டுள்ள மக்கள் மாயை என்னும் பிடியிலிருந்து விடுபட்டு நித்தியானந்தத்தில் மூழ்கிப் பூர்ண சுதந்திரம் பெற்றுப் புனிதத்தன்மையைப் பரத்திடம் அனுபவிக்க அப்பாரமார்த்திக நெறிகள் பயன்படுகின்றன.

ஆரா அமுது என்றும், அளவிலாப் பெம்மான் என்றும் பரம்பொருள் அழைக்கப்படுகின்றார். ஜீவன் இப்பொழுது உள்ள நிலை பரிதாபத்துக்குரியதாகும். சிற்றின்ப வசப்பட்டுப் புலன்களுக்கு உட்பட்ட வாழ்க்கை ஜீவனுக்குரியதாகவிருக்கின்றது. இது சாஸ்வதமான வாழ்க்கை என்று எண்ணி இருப்பவர்கள் இதிலேயே கட்டுண்டு கிடக்கிறார்கள். இதனின்று விலகி நிரந்தரமான வாழ்வைப் பெற வேண்டுமென்று விரும்புகிறவர்களுக்குப் பாரமார்த்திக நெறிகள் பயன்படுகின்றன. பாரமார்த்திக நெறி செல்லும் பண்பாளனாக நீ ஆவாயாக!

மோகவலையில் அகப்பட்டுக் கொண்டிருக்கும்பொழுது உனக்குச் சுதந்தரமில்லை. நீ உன் மனதுக்கும் உலகுக்கும் கட்டுண்டவனாக இருக்கின்றாய். மோக வலையிலிருந்து விடுபட்டுச் சுதந்தர புருஷனாக விளங்கும்பொழுது தான் நீ பூரணன் ஆகின்றாய். மனம் மிகவும் பொல்லாதது. உலக வாசனை உள்ள மனது உன்னை மேல் நிலைக்குப் போக வொட்டாது தடுத்து நிறுத்துகிறது. உள்ளத்தில் உலக வாசனையும், காம வாசனையும் இருக்குமளவு நீ மாயையின் வலையிலிருந்து விடுபடமுடியாது. இடைவிடாத அப்பியாசத்தினாலும் இறைவன் அருளாலும் உன் உள்ளத்திலுள்ள உலக வாசனையையும், காம வாசனையையும் துடைத்துத் தள்ளு. உள்ளத்திலுள்ள உலக வாசனையும் காம வாசனையுமே மாசுகளாகின்றன. 'மனத்துக்கண் மாசுஇலன் ஆதல் அனைத்து அறன்' என்பது வள்ளுவர் வாக்கு. மனத்திலுள்ள மாசை நீ துடைத்துவிட்டால் உன் வாழ்வு அற வாழ்வு ஆகிறது. அறநெறி நிற்பதன் மூலம் நீயும் உலகமும் பேரின்பத்துக்கு உரியவர்களாகிறீர்கள். பேரின்ப வாழ்வு காத்திருக்கச் சிற்றின்ப வாழ்வில் ஏன் உழலவேண்டும்? மனமே! நீ சிற்றின்ப வாழ்வுக்குரிய சிற்றியல்பைத் துறந்து பேரின்ப வாழ்வுக்குரிய பேரியல்பை வளர்ப்பாயாக! என்று உன் மனதுக்கு ஓயாது அறிவு புகட்டி வா. எப்பொழுதெல்லாம் அவ் அறிவுரையிலிருந்து மனம் பிசக முயல்கிறதோ அப்பொழுதெல்லாம் நீ விழிப்புடன் இருந்து நாம ஜபம் செய்து மனதைச் சிற்றியல்பிலிருந்து விடுவிக்க முயல்வாயாக. நாம ஜபமும், கசிந்துருகி இறைவனிடம் செய்யும் பிரார்த்தனையும் உன் மனதிலுள்ள சிற்றியல்பைப் பேரியல்பாக மாற்றும். நாம ஜபத்தையும், பிரார்த்தனையையும் இடைவிடாது செய்து வா.

மனம் சலிக்கும் தன்மையுடையது. அதற்கு ஏதாவது ஒரு வேலை தந்துகொண்டே இருக்க வேண்டும். யானைக்கு இரும்புச் சங்கிலி ஒன்றைத் தந்து உருட்டிக்கொண்டே இருக்கச் செய்வது போன்று மனதுக்கு இறைவனுடைய நாமத்தை ஜபித்துக்கொண்டே இருக்கும்படி செய்யவேண்டும். மனதை நாம ஜபத்தின் மூலம் அடங்கச் செய்துவிட்டால் நாம ஜபசித்தி அடைந்தவர்களாகிறோம். மனதில் கடவுள் சிந்தனை வலுத்து வரவும், காம நுகர்ச்சி அகலவும் நீ சாதனை செய்து வரவேண்டும். சாதனையொன்று இன்றிச் சாதிப்பார் உலகிலில்லை என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு ஆழ்ந்து சாதனையில் ஈடுபட்டு வருவாயாக.

---

# சமய அனுஷ்டானம்

(சுவாமி விவேகானந்தர் 1900 ஆம் ஆண்டில் கலிபோர்னியாவிலுள்ள ஆல்மேடாவில் நிகழ்த்திய சொற்பொழிவு.)

[373ஆம் பக்கத் தொடர்ச்சி]

பிரபஞ்சமென்றும் இயற்கையென்றும் இவ்வுலகை நாம் அழைக்கலாம். இவ்வுலகுக்கு நாம் எப்பெயர் இட்டு அழைத்தாலும் இவ்வுலகம் ஒரு வரையறைக்கு உட்பட்டதாகும். இது ஒருபொழுதும் அகண்ட வஸ்து ஆகாது. அகண்ட வஸ்துவைப் பிரகிருதியாகக் காணுமிடத்து அது தேசம் காலம் வர்த்தமானத்துக்கு உட்பட்டதாகத் தெரிகிறது. நாம் கையாளும் சக்தி எல்லைக்குட்பட்டதாகும். ஒரு இடத்தில் செலவழிக்கும் சக்தி மற்றொரு இடத்தில் பயன்படுகிறது. மொத்தத்தில் சக்திக்குக் குறை எதுவும் இல்லை. கடலில் ஓர் இடத்தில் அலை எழுந்தால் மற்றோர் இடத்தில் பள்ளம் விழும். அஃதே போன்று ஒரு நாடு செல்வத்தில் வளர்ச்சி அடைந்தால் மற்ற நாடுகள் வறுமை அடைகின்றன. கேட்டை நலம் சமப்படுத்துகிறது. உயர்ந்த மனநிலையில் இருக்கும் மனிதன் எல்லாவற்றையும் நல்லதாகவே காணுகின்றான். தாழ்ந்த மனநிலையில் உள்ள மனிதன் எல்லாவற்றையும் கெட்டதாகவே காண்கின்றான். நலம் கேட்டை மனதில் வாங்கிக்கொள்ளாதவன் ஈசனுடைய திருவிளையாட்டைக் காண்கின்றான். இவ்வுலகில் சிலர் அழுதவண்ணமிருக்கின்றனர்; மற்றும் சிலர் சிரித்தவண்ணமிருக்கின்றனர். சிரிப்பவர்கள் பிறகு அழுகின்றார்கள்; அழுகின்றவர்கள் பிறகு சிரிக்கின்றார்கள். இந்நிலையில் நாம் என்ன செய்ய முடியும்?

நல்லது செய்யவேண்டும் என்று விரும்பி நம்மில் எத்தனைபேர் நற்காரியம்செய்து முடிக்கின்றோம்? மிகச் சிலரே நற்காரியம் செய்து முடிக்கின்றனர். அப்படிச் செய்கின்றவர்களை விரல்விட்டு எண்ணிவிடலாம். நாம் நலம் செய்கின்றோம் என்றால் நலம் செய்யவேண்டிய நிர்ப்பந்தத்தில் இருக்கிறோம். நலம் செய்யாது நம்மால் இருக்க முடியாது. நாம் மேல் நோக்கிப் போகின்றோம்; மோதிக் கீழே விழுகின்றோம். இங்ஙனம் தள்ளப்படுகின்றோம். நாம் என்ன செய்ய முடியும்? இவ்வுலகம் என்றைக்கும் இவ் உலகமாகவே இருக்கிறது. இந்தப் பூமி என்றைக்கும் பூமியாகவே இருக்கிறது. நீல நிறம் பழுப்பு நிறமாக மாறுகிறது. மறுபடியும் பழுப்பு நிறம் நீல நிறமாக மாறுகிறது. ஒரு மொழியிலுள்ளது மற்றமொழிக்கு மொழிபெயர்க்கப்படுகிறது. ஒரு வகையான கேடு மற்றொரு வகையான கேடாக மாறுகிறது. இதுதான் இவ்வுலகத்தில் நடந்துகொண்டிருக்கிறது. ஆறு என்று சொன்னாலும், அரை டஜன் என்று சொன்னாலும் ஒரே எண்ணிக்கையைத்தான் குறிக்கின்றோம். காட்டில் வசிக்கும் அமெரிக்க இந்தியன் உங்களைப் போன்று தத்துவ விளக்கத்தைக் கேட்டுப் புரிந்துகொள்ள முடியாது. ஆனால் முரட்டுத்தனமான உணவை அவன் ஜீரணம் பண்ண முடியும். அவன் உடலை வெட்டிக் காயப்படுத்தினாலும் அடுத்த க்ஷணமே அவ்வெட்டுக் காயங்கள் சரியாகிவிடும். ஆனால் உங்களுக்கும் எனக்கும் உடலில் கீறல் அல்லது காயம் ஏற்பட்டால் அதைக் குணப்படுத்த ஆறு மாதம் எடுத்துக்கொள்வோம்.

எவ்வளவுக்கெவ்வளவு உயிர்கள் கீழ்நிலையில் இருக்கின்றனவோ அவ்வளவுக்கவ்வளவு புலனின்பம் மிகுதியாகவிருக்கிறது. கீழ்நிலையிலுள்ள உயிர்களைப்பற்றியும் அவைகளுக்கிருக்கும் சரீர உணர்வைப்பற்றியும் சிந்தித்துப் பாருங்கள். அவைகளுக்கு உணர்ச்சி சரீரத்தில்தான் இருக்கிறது. மனிதனிடத்திலும் இவ்வுண்மையைக் காண்பீர்கள். பண்பாட்டில் கீழ்நிலையில் உள்ள மனிதனுக்குப் புலன் இன்ப நாட்டம் அதிகமாக இருக்கும். பண்பாட்டில் மேல்நிலைக்கு வர வரப் புலன் இன்ப நுகர்ச்சி குறைந்துகொண்டே வரும். நாய் ஒன்று உணவைச் சுவைத்து அருந்துகிறது. ஆனால் தத்துவ விசாரத்தில் உண்டாகும் இன்பத்தை அது அறிந்துகொள்ள முடியாது. அறிவின் மூலம் வரும் இன்பத்தை நாய் இழந்து இருக்கிறது. புலன் இன்பங்கள் உயர்ந்தவைகளே. ஆனால் அறிவு இன்பம் அதனினும் உயர்ந்தது. அருமையான விருந்து அருந்தும்பொழுது உண்மையில் உங்களுக்கு

அதில் இன்பம் இருக்கத்தான் செய்கிறது. வான சாஸ்திர ஆராய்ச்சிக்கூடத்திலிருந்து நக்ஷத்திரங்களை ஆராயும்பொழுது உங்கள் கண்முன் வருகின்ற நக்ஷத்திர மண்டலங்களை எண்ணிப் பாருங்கள். அதில் உண்டாகும் இன்பம் விருந்துண்ணும்பொழுது உண்டாகும் இன்பத்திலும் மேலானதாகவிருக்கும். உலகப் பொருள்களிலிருந்து நீங்கள் பெறும் இன்பத்தைக் காட்டிலும் அறிவின்பம் மேலானதாகத்தான் இருக்கும். மனைவி, மக்கள், கணவன் ஆகிய உறவு முறைகளில் வரும் புலன் இன்பத்தை மறந்து தத்துவ ஆராய்ச்சியில் பெறும் இன்பம் அறிவின்பம் எனப்படுகிறது. இவ்வறிவின்பம் புலனின்பத்துக்கும் மேலானது என்பது சாதாரண அறிவுக்கே விளங்குகிறது. மேலான இன்பத்துக்காகக் கீழான இன்பத்தை எப்பொழுதுமே துறக்கின்றோம். இத்தகைய துறவு நிலையை அடைவதுதான் சமய அனுஷ்டானமாகும். துறவை மேற்கொள்வீர்களாக.

மேலானதை அடையும்பொருட்டுக் கீழானதைத் துறப்பீர்களாக. சமுதாயத்துக்கு அடிப்படையாக இருப்பது எது? ஒழுக்கமும் நன்னடத்தையுமேயாகும். தியாகம் அல்லது துறவை மேற்கொள்ளுங்கள். மற்றவர்களுடைய பொருள்களை அபகரிக்கவேண்டும் என்ற ஆசையையும், மற்றவர்களைத் துன்புறுத்துதலில் உண்டாகின்ற இன்பத்தையும், மற்றவர்களை மட்டம்தட்டவேண்டும் என்ற ஆசையையும், பொய்பேசி மற்றவர்களை ஏமாற்றிப் பெறும் இன்பத்தையும் துறந்துவிடுங்கள். சமுதாயத்துக்கு ஒழுக்கம் அடிப்படை அல்லவா? கற்பைக் காப்பதற்காகவே மணம் நிகழ்கிறது. காட்டுமிராண்டி மணம் புரிந்துகொள்வதில்லை. கற்புடன் வாழ்வதற்கு மனிதன் மணம்புரிந்துகொள்கிறான். இங்ஙனம் தியாகத்தைப்பற்றிச் சொல்லிக்கொண்டே போகலாம். எனவே நீங்கள் துறவு அல்லது தியாகம் செய்யுங்கள். தியாகமே மேலானது. தியாகம் பண்ணுங்கள். தியாகத்தின் மூலம் நீங்கள் மேலானதைப் பெறுகிறீர்கள். ஆனால் யார் தியாகம் செய்ய ஆயத்தமாக இருக்கிறார்கள்? மேலானதொன்றைப் பெறும்வரையில் நீங்கள் தியாகம் செய்ய முடியாது. நீங்கள் பிரமாதமாகப்பேசலாம். பெருமுயற்சி எடுத்துக்கொள்ளலாம். பல காரியங்களைச் செய்து முடிக்கலாம். ஆனால் மேலானதொன்றைப் பெறும்பொழுதுதான் தியாகம் உங்களுக்கு அமைகிறது. மேலானதொன்றை அடைந்துவிட்டால் கீழானது தானாக நழுவிப்போகும்.

மேலானதைப் பற்றிக்கொண்டு கீழானதைத் துறப்பது சமய அனுஷ்டானம் எனப்படும். இதைத்தவிர சமயத்தில் வேறு என்ன இருக்கிறது? தெருக்களைச் சுத்தம் செய்வதும், மருத்துவசாலைகளை அமைப்பதும்தானா சமயம்! துறவில்தான் மகிமை இருக்கிறது. துறவுக்கு முடிவு இல்லை. துறவுக்கு ஒரு எல்லைகட்ட விரும்புகிறார்கள். இதில்தான் சிரமம் ஏற்படுகிறது. துறவுக்கு எல்லையே இல்லை.

கடவுள் காட்சி ஏற்படும்பொழுது கடவுளைத் தவிர வேறொன்றும் இல்லை. உலகக் காட்சி இருக்கும்பொழுது கடவுள்காட்சி இல்லை. ஒளியும் இருளும் சேர்ந்து அமையாதது போன்று கடவுள் காட்சியும் உலகக் காட்சியும் சேர்ந்து அமையா. கிறிஸ்துவ மதத்திடமிருந்தும் இயேசுநாதரிடத்திருந்தும் இதைத்தான் நான் அறிந்துகொண்டேன். புத்த மதமும் இதைத்தான் புகட்டுகிறது அல்லவா! இந்துமதமும் இஸ்லாமியமதமும் இதைத்தான் புகட்டுகின்றன. ரிஷிகளுடைய போதனைகளும் இவ்வுண்மையைத்தான் விளக்குகின்றன. துறக்கவேண்டிய உலகத்தைத் துறக்காமல் நான் இருக்கிறேன். துறக்கவேண்டியது தேகாத்ம புத்தியாகும். என்னுடைய சரீரத்தை வளர்க்கும்பொருட்டு என்னுடைய சகோதரர்களைத் தாக்க நானாகவே முற்படுகிறேன். இந்தச் சரீரத்தை நன்றாக வைத்துக்கொள்வதற்கும், இதற்குச் சிறிது சுகம்தருவதற்கும் நான் பிறரைத் துன்புறுத்துகின்றேன்; நான் பல தவறுகளும் செய்கின்றேன்.

சான்றோர்களும் மடிந்துபோனார்கள். அற்ப மனிதர்களும் மாண்டுபோனார்கள். தெய்வங்களும் அழிகின்றன. எங்கும் மரணம்தான். நீண்டகாலம்தொட்டு சவக்கல்லறைகள்தாம் காட்சி கொடுக்கின்றன. இத்தகைய அழிவைப் பார்த்தும் இவ்வுலகை நாம் பற்றிக்கொண்டிருக்கின்றோம். இவ்வுடல் அழிந்துபோகும் என்ற உண்மையை அறிந்தும் "நான் சாகப்போவதில்லை" என்று சரீரத்தைப்

பற்றிப் பிடித்துக்கொண்டிருக்கிறோம். நான் சாவதில்லை என்பதில் பொருளும் இருக்கிறது. ஆன்மா அழிவதில்லை. ஆனால் அழிந்து போகக்கூடிய உடலை நாம் பற்றிக்கொண்டிருக்கிறோம். அதுதான் நம்முடைய தவறு ஆகும்.

தேஹாத்ம புத்தி படைத்தவர்கள் உலகாயதர்கள் ஆகின்றார்கள். உடல் பற்றுடையவர்களுக்கு ஆத்ம ஞானம் வாய்க்காது. ஒரு மனிதன் என் சரீரத்தைத் துன்புறுத்தினால் நான் துன்புறுத்தப்பட்டவனாக நினைக்கின்றேன். தேகாத்மபுத்தி எனக்கு இல்லாவிட்டால் நான் துன்புறுத்தப்பட்டவன் ஆகமாட்டேன். நான் வெறுமனே ஆத்மா என்று சொல்வதால் நான் ஆத்மா ஆகிவிடமுடியாது. நான் இப்பொழுது சரீரமயமாகத்தான் இருக்கிறேன். என்னைச் சரீரமயமாக மாற்றிக் கொண்டுள்ளேன். சரீர உணர்ச்சியைத் தியாகம் பண்ணவேண்டும். என்னுடைய உண்மை சொரூபமான ஆத்ம சொரூபத்துக்குத் திரும்பிப் போகவேண்டும். நான் ஆத்ம சொரூபம். ஆத்மாவைக் கத்தி வெட்டாது; நெருப்பு எரிக்காது; நீர் நனைக்காது; காற்று உலர்த்தாது. ஆத்மா பிறக்கவில்லை. அது சிருஷ்டிக்கப் படவுமில்லை. ஆத்மாவுக்கு ஆதியுமில்லை; அந்தமுமில்லை. அது பிறப்பு இறப்புக்கு அப்பாற்பட்டது. அது சத்சொரூபமாக இருக்கிறது. அத்தகைய ஆத்ம சொரூபம் நான். நான் ஆத்ம சொரூபம் என்று உணராது சரீரமயமாக என்னை நினைப்பதால் நான் துன்பத்துக்கு ஆளாகின்றேன். ஜடப்பொருளாகிய சரீரத்தோடு என்னைச் சம்பந்தப்படுத்திக்கொண்டு அதனால் ஏற்படும் விளைவுகளை நான் அனுபவிக்கின்றேன்.

ஆத்மாவோடு நம்மை ஐக்கியப்படுத்திக் கொள்வதுதான் சமய அனுஷ்டானம் ஆகும். சரீரத்தோடு நம்மை ஐக்கியப்படுத்தியிருக்கிற தப்பு எண்ணத்தை எவ்வளவு தூரம் போக்குகிறோமோ அவ்வளவுக்குத்தான் முன்னேற்றம். நீங்கள் ஆயிரக்கணக்கான மருத்துவச் சாலைகளைக்கட்டி இருக்கலாம். லக்ஷக்கணக்கான சாலைகள் அமைத்திருக்கலாம். நீங்கள் ஆத்ம சொரூபம் என்பதை உணராவிட்டால் அச்செயல்களால் யாது பயன்? நாய் ஒன்று எத்தகைய உணர்வோடு சாகிறதோ அத்தகைய உணர்வோடு ஆத்மீக உணர்வு பெறாதவர்களாகிய நீங்கள் சாகிறீர்கள்.

மரணத்தை யாரும் தடுத்து நிறுத்தமுடியாது. நீரிலோ, விண்ணிலோ, காற்றிலோ, அரண்மனையிலோ, சிறைச்சாலையிலோ—எங்கு வேண்டுமென்றாலும் மரணம் நிகழலாம். இதை நீங்கள் அறிவீர்கள். உங்களை எது பயமற்றதாக்குகிறது? நீங்கள் எல்லையற்ற ஆத்மா என்பதையும் பிறப்பு இறப்பு அற்றவர்கள் என்பதையும் அறியும்பொழுது நீங்கள் பயமற்றவர்களாகிறீர்கள். ஆத்மாவை நெருப்பு எரிப்பதில்லை; எந்தக்கருவியும் அதை வெட்டாது; நஞ்சும் அதைத் துன்புறுத்தாது. இது வெறும் கோட்பாடன்று என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள். புஸ்தகப் படிப்பில் இவ்வுண்மையை அறியமுடியாது. "கிளிக்கு ராமா, ராமா என்று சொல்லும்படி பாடம் புகட்டலாம். அது ராமா, ராமா என்று எல்லா நேரமும் சொல்லும். ஆனால் ஒரு பூனைவந்து அதன் கழுத்தைக் கவ்வினால் நாம் புகட்டியதை எல்லாம் மறந்துவிடும்" என்று என் குருநாதர் அடிக்கடி பகர்வதுண்டு. நீங்கள் பிரார்த்தனை செய்த வண்ணம் இருக்கலாம். உலகத்திலுள்ள சாஸ்திரங்களை எல்லாம் படித்திருக்கலாம். எல்லாத் தெய்வங்களையும் வழிபட்டிருக்கலாம். ஆனால் நீங்கள் ஆத்மசொரூபம் என்று உணராத முன்பு உங்களுக்கு விடுதலை இல்லை. இது வெறும் பேச்சன்று; கொள்கையன்று; விவாதமன்று. இது அநுபூதிக்கு உரியதாகும். அநுபூதி பெறுவது தான் சமய அனுஷ்டானமாகும்.

முதலில் ஆத்மாவைப்பற்றிய உண்மையைக் கேளுங்கள். கேட்டதைப் பிறகு சிந்தித்துப் பாருங்கள். அதன்பின் அதைப்பற்றித் தியானம் செய்யுங்கள். வீண்வாதங்கள் வேண்டாம். அகண்ட சொரூபமாயுள்ள ஆத்மா நீங்கள் என்பதை அறிந்து திருப்தி அடையுங்கள். ஆத்மா தன்னை ஆத்மாவாகவே கருதவேண்டும். ஆனால் இப்பொழுது ஆத்மா தன்னைச் சரீரமாகக் கண்டுகொண்டிருக்கிறது. இந்தத் தவறுக்கு முற்றுப்புள்ளி ஏற்படவேண்டும். எந்தக் கணத்தில் நீங்கள் ஆத்மசொரூபம் என்பதை உணர்கிறீர்களோ அந்தக்கணமே நீங்கள் விடுதலை அடைகிறீர்கள். (தொடரும்)

# நம் தேசீய செல்வம்

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் திருப்பராய்த்துறை தபோவனம் அந்தர்யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

[377 ஆம் பக்கத் தொடர்ச்சி]

யக்ஞ கர்மம் சரீரம் உள்ளளவும் செய்தாக வேண்டும். ஆனால் தக்ஷப்பிரஜாபதி செய்த யக்ஞம் பொருந்தாத யக்ஞமாக விருந்தது. தக்ஷப்பிரஜாபதிக்குப் பார்வதி தேவி மகளாகத் தோன்றித் தாக்ஷாயணி என்ற பெயர் பெற்றாள். தாக்ஷாயணி சிவனாருக்கு மணம் முடித்துத் தரப்பட்டாள். தக்ஷப்பிரஜாபதி யாகம் செய்தபொழுது அந்த யாகத்துக்குத் தன் மகளாகிய தாக்ஷாயணிக்கு அழைப்பு அனுப்பவில்லை. தக்ஷப்பிரஜாபதி தன் மருமகனான சிவனாருக்கும் அழைப்பு அனுப்பவில்லை. தக்ஷன் தேவர்களுக்கெல்லாம் அழைப்பு அனுப்பி இருந்தான். தக்ஷப்பிரஜாபதியின் யாகத்துக்குத் தேவர்கள் யாவரும் வானவெளியில் போய்க்கொண்டிருந்தார்கள். தேவர்கள் யாகத்துக்குச்செல்வதைக் கைலாயத்திலிருந்து பார்த்த தாக்ஷாயணி சிவனாரிடம் பகர்ந்ததாவது: ''தந்தை நடத்தும் யாகத்தைப் பார்க்க நாமும் செல்லலாம்.'' அதற்குச்சிவனார் பகர்ந்ததாவது: ''உன்னுடைய தந்தையிடமிருந்து நமக்கு அழைப்பு இல்லை; அழைப்பு இல்லாமல் நாம் போகக் கூடாது.'' தந்தையின் வீட்டுக்குச் செல்வதற்கு அழைப்புத் தேவையில்லை என்றாள் அம்பிகை. ''அப்பா வீடாக இருந்தாலும் அழைப்பு இல்லாமல் போகக்கூடாது'' என்றார் சிவனார். ஆனால் அம்பிகைக்குத் தந்தை வீட்டுக்குப் போகவேண்டும் என்ற ஆவல் மனதுக்குள் இருந்தது. அதை அறிந்த சிவனார் அம்பிகையைப் பார்த்து ''உன் தந்தையின் யாகத்துக்குப் போகவேண்டும் என்று உனக்குத் தோன்றினால் நீ போகலாம்'' என்று அரை மனதோடு சம்மதித்தார். தாக்ஷாயணி தனியாகத் தந்தையின் யாகத்துக்குச் சென்றாள். யாகசாலைக்கு வந்த மகளைத் தக்ஷப்பிரஜாபதி பரிகாசம் பண்ணினான். மகளையும் மருமகனையும் அவமானப்படுத்தினான். தந்தையின் மனப்பான்மையை அறிந்த தாக்ஷாயணி ''இனி இந்தச் சரீரத்தை மீண்டும் சிவனாரிடம் எடுத்துச் செல்லக்கூடாது'' என்று அங்கேயே அழித்துவிட்டாள். இந்தச் செய்தி சிவனாருக்கு எட்டியது. தம் சடையைத் தரையில் தட்டினார். சடையிலிருந்து வீரபத்திரன் தோன்றி வந்தான். சிவனார் வீரபத்திரனைப் பார்த்து ''நீ தக்ஷப்பிரஜாபதி யாகத்துக்குச் சென்று அதைப் பாழ்படுத்து'' என்றார். வீரபத்திரன் உடனே சென்று தக்ஷப்பிரஜாபதியின் யாகத்தில் கலந்துகொண்டவர்களை எல்லாம் படாத பாடு படுத்தினான். தேவர்களுக்கெல்லாம் கை கால்கள் ஒடிந்தன. தேவர்கள் பிரம்ம தேவனிடம் சென்று ''நாங்கள் ஒரு தவறும் செய்யவில்லை. தக்ஷப்பிரஜாபதியின் யாகத்துக்குச் சென்று ஹவிர்பாகம் எடுத்துக்கொண்டோம். இது எங்களுக்கு உரியது தானே'' என்றார்கள். ''எங்குச் சங்கரனும் நாராயணனும் இல்லையோ அங்கு எது நிகழ்ந்தாலும் அது அமங்களமாகத்தான் முடியும். தக்ஷப்பிரஜாபதியின் யாகத்தில் சங்கரனும், நாராயணனும் கலந்துகொள்ளவில்லை. அவர்கள் கலந்துகொள்ளாத இடத்துக்கு நீங்கள் ஏன் சென்றீர்கள்? நீங்கள் உய்வடைவதற்குச் சிவனாரிடம் சென்று முறையிடுவதுதான் உபாயம். கருணாகரனாகிய அவர் உங்களைக் காப்பாற்றுவார்'' என்றார் பிரம்மன். பிரம்மதேவன் சொற்படி நடந்து தேவர்கள் உய்வடைந்தனர். மக்கள் நெறியான வாழ்க்கையைப் புறக்கணிப்பது சிவனாரைப் புறக்கணிப்பது ஆகிறது. காமத்துக்கு வசப்பட்டு இனத்தை ஏராளமாகப் பெருக்குவது தக்ஷயக்ஞமாகும். சுகபோகத்தில் வரம்புகடந்து மூழ்குவது அந்தயாகத்தில் ஹவிஸ் உண்பது ஆகும். அம்பிகையின் தாக்ஷாயணியின் மறைவு சக்தியின் புனிதத்தைப் பாழ்படுத்தியதின் விளைவாகும். உலகம் எப்பொழுதெல்லாம் இங்ஙனம் நிலைகுலைகிறதோ அப்பொழுது ஏற்படும் இன்னல் வீரபத்திரனது வருகையாகும். இன்றைக்குத் தக்ஷப்பிரஜாபதியின் யாகம் நிகழ்கிறது என்று சொல்லலாம். இது அழிவில்தான்கொண்டு சேர்க்கும் என்னும் பாடத்தை நாம் கற்றுக்கொள்ளவேண்டும்.

தவத்தில் ஈடுபடுகின்றவர்கள் நினைத்த

இடத்துக்குச் சென்று நினைத்த நிகழ்ச்சிகளில் எல்லாம் கலந்துகொள்ளக் கூடாது. எங்கு ஐதிகத்துக்கும் தர்மத்துக்கும் ஒத்த பாங்கில் நிகழ்ச்சிகள் அமைந்திருக்கின்றனவோ அங்கு உள்ள நிகழ்ச்சிகளில் எல்லாம் கலந்து கொள்ளவேண்டும். ஆராய்ச்சி பண்ணாது கண்ட இடங்களுக்குச் சென்று பொருந்தாத நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ளக் கூடாது.

நர நாராயணர்களாக மகாவிஷ்ணு தோன்றினார். அவ்விரு முனிவர்களும் ஹிமாலயத்தில் பத்ரிநாத் பகுதியிலிருந்து தவம்புரிந்தார்கள். நாராயணன் புரிந்த தவம் ஜீவர்களைப் பண்படுத்தித் தம் மயமாக ஏற்றுக்கொள்வதற்காகும். நரன் என்னும் முனி செய்த தவம் ஜீவாத்மா எடுத்துக்கொள்ளும் முயற்சியைக் குறிக்கிறது. பத்ரிக்குச் செல்லும்பொழுது மேடுபள்ளங்களைக் கடந்து போகின்றோம். வாழ்க்கையில் முன்னேற்றமும் பிற்போக்கும் மாறிமாறி அமையும் என்பதை இது விளக்குகின்றது. இமயமலையிலுள்ள மேடு பள்ளங்களைப் பொருட்படுத்தாமல் மேலே போய்க்கொண்டிருந்தால் 'பத்ரிநாத்' ஆஸ்ரமத்தை அடையலாம். அங்ஙனம் வாழ்க்கையில் வந்தமையும் உயர்வையும், தாழ்வையும் பொருட்படுத்தாமல் சாதனை செய்துகொண்டிருந்தால் பரத்தை அடையலாம். இப்பெரிய கோட்பாட்டை நர நாராயணர்களாகிய முனிவர்கள் செய்கின்ற தவம் விளக்குகின்றது. வாழ்வு முழுவதும் தவ சொருபமாக இருக்கவேண்டும். தவத்திலிருந்து பிசகுகின்றபொழுது பெருநிலையிலிருந்து பிசகுகின்றவர்களாகின்றோம்.

"தவம்செய்வார் தம்கருமஞ் செய்வார் மற்றல்லார்
அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு"

என்பது குறள். துரியோதனன் பாண்டவர்களை ஒழித்துவிடுவதற்காக வனத்துக்கு அனுப்பி வைத்தான். பாண்டவர்கள் வனத்தில் ஆழ்ந்து தவத்தில் ஈடுபட்டார்கள். ஹஸ்தினபுரத்தில் இருந்த கௌரவர்கள் போருக்கு ஆயத்தப்படுத்திக்கொண்டிருந்தார்கள். வனத்திற்குச் சென்ற பாண்டவர்கள் தங்களை நாடி வரும் ரிஷிகளுக்குத் தக்கமுறையில் ஆகார வசதி செய்து வைக்கவேண்டுமென்று எண்ணினார்கள். சூரிய பகவான் அவர்கள் முன் தோன்றி அவர்கள் கையில் அக்ஷய பாத்திரம் ஒன்று கொடுத்து "நீங்கள் வனவாசம் செய்யும் பன்னிரண்டு வருடங்களுக்கும் இந்தப் பாத்திரம் உங்களிடம் இருக்கட்டும். திரௌபதி சமைத்த உணவை இந்த அக்ஷய பாத்திரத்தில் போட்டுவிட்டால் உங்களிடம் வருகின்ற அதிதிகளுக்கெல்லாம் உணவு கொடுத்துக்கொண்டே இருக்கும். அதிதிகளுக்கு உணவு படைத்த பின் உங்களுக்கு உணவு படைத்துவிட்டுக் கடைசியாகத் திரௌபதியும் சாப்பிட்டுவிட்டால் அன்றைக்கு அக்ஷய பாத்திரத்திலிருந்து ஒன்றும் வராது. அதன் பிறகு அடுத்தநாள்தான் அந்தப் பாத்திரம் பயன்படும்" என்று கூறினார். அந்த அக்ஷய பாத்திரத்தைக் கொண்டு வனத்திலுள்ள யுதிஷ்டிரர் தம் ஆச்ரமத்துக்கு வரும் முனிவர்கள் ரிஷிகள் ஆகிய அனைவரையும் சிறந்த முறையில் உபசரித்து வந்தார். அம்முனிவர்களோடு பாரமார்த்திகப் பெருநிலையைப் பற்றி ஆராய்ச்சிசெய்வதும் உபாசனை செய்வதும் ஆகிய செயல்களில் ஈடுபட்டுப் பாண்டவர்கள் தவத்தின் உச்சநிலையில் இருந்தார்கள். அவர்களைக் கெடுக்கவேண்டும் என்று துரியோதனன் திட்டம் போட்டான். ஒருசமயம் துருவாச முனிவர் தம் பத்தாயிரம் சிஷ்யர்களுடன் ஹஸ்தினபுரம் போனார். துரியோதனன் துருவாசரையும் அவருடைய சிஷ்யர்களையும் கண்ணும் கருத்துமாக உபசரித்துச் சிறப்பாக அவர்களைக் கௌரவப் படுத்தினான். துரியோதனன் ஏற்பாட்டில் திருப்தி அடைந்த துருவாச முனிவர் துரியோதனனைப் பார்த்து "நீ என்னை மிகவும் திருப்திப்படுத்தினாய். நான் மகிழ்ச்சி அடைகின்றேன். நீ ஒரு வரம் கேள். நான் அதைத் தருகிறேன்" என்றார். துரியோதனன் துருவாசரிடம் கேட்ட வரமாவது: "ஹஸ்தினபுரம் வாசிகளாகிய எங்களிடம் தாங்கள் விருந்தினர்களாக வந்திருந்து எங்களைக் கிருதார்த்தர்களாக்கினீர்கள். எங்கள் பங்காளிகளாகிய பாண்டவர்கள் வனத்தில் இருக்கிறார்கள். எங்களிடம் நீங்கள் வந்தது போன்று அவர்களிடமும் நீங்கள் பத்தாயிரம் சிஷ்யர்களுடன் செல்லவேண்டும். திரௌபதி உணவு உண்டான பிறகு நீங்கள் யாவரும் அங்குப் பிக்ஷைக்குப் போய்ச் சேரவேண்டும்.

இதுதான் நான் கேட்கும் வரம்.'' துருவாச முனிவர் அவ்வாறே செய்கிறேன் என்று அவ னிடம் ஒத்துக்கொண்டார்.

துரியோதனனுக்குக் கொடுத்த வரப்படி துருவாச மஹரிஷி பத்தாயிரம் சிஷ்யர்களுடன் பிற்பகல் வேளையில் யுதிஷ்டிரரின் ஆச்ரமத் துக்குச் சென்ருர். யுதிஷ்டிரர் அவர்களை வர வேற்று ''நீங்கள் யாவரும் ஸ்நானம் செய்து போஜனத்துக்கு வாருங்கள்'' என்று அவர் களை நதிக்கு அனுப்பி வைத்தார். யுதிஷ்டிரர் திரௌபதியிடம் வந்து ''துருவாச மஹரிஷி பத்தாயிரம் சிஷ்யர்களுடன் வந்திருக்கிருர். அவர்கள் யாவரையும் நதிக்குச் சென்று ஸ்நா னம் செய்துவிட்டுப் போஜனத்துக்கு வரும் படி அழைத்திருக்கிறேன்'' என்று சொன் னர். திரௌபதி தேவி அப்பொழுது சாப் பிட்டு முடித்து விட்டாள். என்ன செய்வது என்று தெரியாத திரௌபதி கண்ணீரும் கம்பலையுமாகக் கண்ணனிடம் பிரார்த்தித்த தாவது: ''கண்ணு! நீயே, எங்களைக் காப் பாற்றவேண்டும்; முன்பு துரியோதனன் சபை யில் துச்சாதனன் துகிலை உரிந்து அவமானப் படுத்திய பொழுது நீ என்னைக் காப்பாற்றி ஞய். இப்பொழுது துருவாச மஹரிஷியினு டைய கோபத்திலிருந்து எங்களைக் காப்பாற்ற வேண்டும்.'' திரௌபதியினுடைய பிரார்த் தனையை நிறைவேற்றுவதற்குத் துவாரகையி லிருந்து கண்ணன் பாண்டவர்கள் இருக்கு மிடத்திற்கு வந்து சேர்ந்தார். ''நான் இப் பொழுது தாங்க முடியாத பசியோடு வந்திருக் கிறேன், எனக்கு உணவு கொடு'' என்று அந்தணன் வடிவத்தோடு வந்த கண்ணன் கேட்டார். ''எத்தகைய கஷ்டத்திலிருந்து எங்களுக்கு விமோசனம் தரவேண்டும் என்று கேட்கின்ருேமோ அதே கஷ்டத்திற்கு மீண் டும் எங்களை ஆளாக்குகின்றீர்'' என்ருள் திரௌபதி. கண்ணன் அக்ஷய பாத்திரத்தைக் கொண்டு வரச் சொல்லி அதில் ஒட்டியிருந்த ஒரு பருக்கையை எடுத்துச் சாப்பிட்டு விட்டுப் பரமதிருப்தி என்ருர்.

கண்ணன் பரமதிருப்தி என்று சொன்னதும் துருவாச மஹரிஷிக்கும் அவருடைய பத்தா யிரம் சிஷ்யர்களுக்கும் வயிறு நிரம்பி விட்டது. அவர்கள் இத்தகைய நிலையில் பாண்டவர் களிடம் செல்லக்கூடாதென்று எண்ணி அங் குப் போகாமலேயே வேறு இடம் போய் விட்டார்கள். துருவாசருடைய சாபத்திற் குப் பாண்டவர்கள் ஆளாகவேண்டுமென்று துரியோதனன் துருவாசமுனிவரைப் பாண்டவர் களிடம் அனுப்பி இருந்தான். இறைவனுடைய அருளால் அவன் திட்டம் வெற்றி பெறவில்லை. பாண்டவர்கள் முழுமனதோடு மேலும் தவத் தில் ஈடுபட்டார்கள். எந்த உயிருக்கும் தீங்கு செய்யவேண்டும் என்ற எண்ணம் அவர்களுக்கு இல்லை. எல்லா உயிர்களுக்கும் நலம் செய்ய வேண்டும் என்ற எண்ணமே அவர்களிடம் இருந்தது. எனவே அவர்களிடம் அருளும் ஆக்கமும் வளர்ந்தன. தாயாதிகளை அழித்துவிட வேண்டுமென்ற எண்ணம் கௌர வர்களிடம் இருந்தது. அதற்காகச் சூழ்ச்சி களைச் செய்தார்கள். ஆனல் எந்தச் சூழ்ச்சி யிலும் அவர்கள் வெற்றி பெறவில்லை.

மனிதன் எப்படி வாழ்ந்திருக்க வேண்டும் என்பது தெரியுமா? நல்ல மனம் உடையவனுக, ஆழ்ந்து தவத்தில் ஈடுபடுபவனுக இருக்க வேண்டும். பிறர்க்கு நலம் செய்கின்ற பாங்கில் நற்காரியங்கள் செய்வதிலும், தவத்திலும் ஈடு பட்டு வாழ்ந்து வருகின்றவன் மேன்மை அடைந்து கொண்டே இருப்பான். பிறர்க்குத் தீங்கு செய்ய நினைக்கின்றவன், பிறரைக் கெடுக்க முயல்கின்றவன், சுயநலம் படைத் திருக்கின்றவன் தனக்கு எத்தகைய பாது காப்புச் செய்து கொண்டாலும் அழிந்து போவான் என்பதற்குக் கௌரவர்கள் சான் ருக விளங்குகின்ருர்கள்.

இதுகாறும் ஆராய்ந்த ஆராய்ச்சியிலிருந்து தவம்தான் நமக்கு உற்ற செல்வம் ஆகிறது என்பது விளங்குகிறது. தவத்தை ஒரு நாளும் புறக்கணிக்கக் கூடாது. தவத்தில் குடும்பஸ் தர்களும் ஈடுபடவேண்டும். மக்களாக இருக் கின்ற அனைவரும் தவத்தைக் கையாளவேண்டு மென்று கிருஷ்ண பரமாத்மா பகர்ந்துள்ளார். பழுதுபட்டுப் போன இரும்பு, துருப்பிடித்த இரும்பு, உடைந்த இரும்பு ஆகியவற்றையெல் லாம் சேகரித்து உலையில் இட்டு உருக்கினல் அவை உருகி இளகித் திரவமாகிறது. பிறகு அத்திரவத்துக்குப் புதிய வடிவம் கொடுத்தால் பழைய இரும்பு புதிய இரும்பாகிறது. அதற்கு

நிகராக மனிதன் தான் செய்கின்ற தவத்தின் மூலமாகத் தன்னை மேலோனாகத் திருத்தி அமைக்கின்றான். திரிகரணங்களையும் தெய்வீக உணர்ச்சியில் ஈடுபடுத்தி நம்மைத் தெய்வ சொரூபமாக மாற்றி அமைப்பது தவம் எனப் படுகிறது. தவத்தில் அசுரத்தவம், தெய்வீகத் தவம் என இரண்டு இருக்கின்றன. அசுரத் தவம் செய்கின்றவனுக்கும் சமுதாயத்துக்கும் கேட்டை உண்டுபண்ணுகிறது. அசுரத் தவத்தில் நலன் ஒன்றும் இல்லை.

புத்தர் பெருமான் வாழ்க்கையின் ஆரம்பத்தில் மாளிகையில் சுகபோகத்தில் இருந்தார். பிறகு அருள்தாகம் அவருடைய உள்ளத்தில் எழுந்தபொழுது வாழ்க்கையின் ரகசியத்தை அறிந்து கொள்வதற்குத் துறவியாகப்போனார். கடுமையான தவத்தில் ஈடுபட்டார். உடல் எலும்பும் தோலுமாக மாறிப்போய் விட்டது. உட்காருவதற்குக்கூட உடலில் சக்தியில்லாது போய்விட்டது. அந்நிலையில் ஒரு கல்யாண ஊர்வலம் அவர் இருந்த பக்கமாகச் சென்றது. அதில் வீணையோடு பேசுகின்ற பாங்கில் பாட்டுப் பாடிக்கொண்டு போனார்கள். அப் பாடலின் பொருளாவது: "வீணையே உன் னிடம் அமைந்துள்ள நரம்புகளைத் தளர்த்தி னால் ஓசை வராது. அதற்கு மாறாக நரம்புகளை அதிகம் முறுக்கினாலும் நரம்புகள் தெறித்துப் போகும். நரம்புகளை நடுநிலையில் வைத்தால் தான் தெய்வ சந்நிதிக்கு எடுத்துச் செல்லும் இனிய ஓசையை உன்னிடம் இருந்து எழுப்ப முடியும்." இதைப் புத்தர் கேட்டார். புத்த ருக்கு ஞானோதயம் வந்தது. உடலைச் சுக போகங்களில் ஈடுபடுத்தினால் அது தளர்ந்து போய்விடும். அசுரத்தபசு முறையில் அதை வாட்டினால் அது தெறித்துப் போகும். நடுநிலை யில் உடலை வைத்திருந்தால்தான் அது பெரிய காரியத்துக்கு உதவும். சித்திரவதை பண்ணு வதும், வாழ்க்கையைக் கொடுரமான முறையில் பாழ்படுத்துவதும் அசுரத் தவம் ஆகிறது. கொடூரத் தன்மைக்கோ, முரட்டுத் தன் மைக்கோ தவத்தில் இடமில்லை. தெய்வீக முடையதாக வாழ்க்கையைத் திருத்தி அமைப் பதுதான் தவமாகிறது.

ஸ்தூலமாக இருப்பது சரீரமாகிறது. அதை விடச் சூட்சுமமாக இருப்பது சொல். அதை விடச் சூட்சுமமாக இருப்பது எண்ணம். மனம், மொழி, மெய் ஆகிய முக்கரணங்களை என்ன பாங்கில் பயன்படுத்தினால் அது தவமா கிறது என்பதைக் கிருஷ்ணபரமாத்மா பகர்ந் துள்ளார்.

देव द्विज गुरु प्राज्ञ पूजनं शौचमार्जवम् ।
ब्रह्मचर्यमहिंसा च शारीरं तप उच्यते ॥

'தேவ த்விஜ குரு ப்ராக்ஞ பூஜனம் சௌசம் ஆர்ஜவம்
ப்ரஹ்மசர்யம் அஹிம்ஸா ச சாரீரம் தப உச்யதே'

என்பது கீதாவாக்கியம். சரீரத்தைக் கொண்டு தெய்வத்தையும், பிராம்மணனையும், குருவை யும், ஞானியையும் வணங்குதல் வேண்டும். மேற்கூறியவர்களிடத்தில் தெய்வத்தன்மை மேலோங்கி இருப்பதால் அவர்களைச் சரீரத் தால் வணங்குதல்வேண்டும். இறைவன் எங்கும் நிறைந்திருக்கின்றாரெனினும் அவரை ஆலயத்தில் எழுந்தருளச் செய்து வழிபாடு செய்கின்றோம். கடவுள் வழிபாடு செய்ய முயல்கின்றவர்களுக்கு ஆலயம் துணையாக வந்து அமைகின்றது. இக்கருத்தை ஸ்ரீ ராம கிருஷ்ண பரமஹம்சர் இங்ஙனம் பகர்ந்திருக் கிறார். பசுவின் மேனி முழுவதும் பால் ரத்த மயமாக வியாபித்திருக்கிறது. ஆனால் பால் மயமாக மாறி அமைவது பசுவின் மடிக்கு வந்து சேருகிறது. அது போன்று எங்கும் நிறை பொருளாக இருக்கும் கடவுள் பக்தனுடைய வசதிக்காக ஆலயத்தின்கண் எழுந்தருளியுள் ளார். ஆலய வழிபாட்டுக்குச் செல்கின்றவன் ஆலயத்தின்கண் எழுந்தருளியுள்ள தெய்வத் துக்கு வீழ்ந்து வணங்குகின்றான். அங்ஙனம் ஓர் இடத்திலுள்ள தெய்வத்துக்கு வீழ்ந்து வணக்கம் செய்வதன் வாயிலாக அவன் பண்பாடு அடைந்து வருகின்றான். பண்பாட் டின் மூலம் எங்கும் நிறைந்திருக்கின்ற பொரு ளுக்கு வணக்கம் செலுத்திப் பழகுகின்றான். பக்தி பூர்வமாக ஆடவர்கள் எட்டு அங்கங் களும் தரையில் படும்படி வீழ்ந்து வணங்க வேண்டும். அதற்கு அஷ்டாங்க நமஸ்காரம் என்று பெயர். பெண்பாலர்கள் ஐந்து அங்கங் கள் தரையில் படும்படியாக வணங்கவேண்டும். அதற்குப் பஞ்சாங்க நமஸ்காரம் என்றுபெயர். இப்படி வணங்குவதன் மூலம் சரீரதபஸ் செய்வதாகிறது. த்விஜர்கள் அல்லது இரு

பிறப்பாளர்கள் என்பவர்கள் சம்ஸ்காரத்தின் மூலம் மனதை மேலான மனதாகத் திருத்தி அமைக்கின்றார்கள். மனதைத் திருத்தி அமைப்பதன் மூலம் அவர்கள் இரண்டாவது பிறப்பெடுத்தவர்களாகின்றார்கள். தாயின் கர்ப்பையிலிருந்து வெளிவருவது முதல் பிறப்பாகிறது. மனதைத் திருத்தி அமைக்கின்ற பொழுது அது இரண்டாவது பிறப்பாகிறது. அதை ஞானப் பிறப்பு என்கிறோம். யக்ஞோபவீதம் அணிந்துகொள்வது என்ற சடங்கின் மூலம் மனிதன் திருந்தி அமைந்தவன் ஆகிவிட முடியாது. சடங்கின் மூலமாகவோ, சடங்கை அனுஷ்டிக்காமலோ மனதை மேலான மனதாகத் திருத்தி அமைக்கலாம். எவனொருவன் தன்மனதை மேலான மனதாகத் திருத்தி அமைக்கின்றானோ அவன் த்விஜன் ஆகின்றான்.

மனதை மேலான மனதாக மாற்றி அமைத்துப் பாரமார்த்திகப் பெருவாழ்வு வாழ்கின்ற அனைவர்க்கும் நமஸ்காரம் பண்ணுவது கடவுள் வழிபாட்டுக்கு நிகர் ஆகின்றது.

"அன்பர் பணி செய்ய என்னை ஆளாக்கிவிட்டு விட்டால்
இன்பநிலை தானே வந்து எய்தும் பராபரமே"

என்பது தாயுமானவர் வாக்கு. பாரமார்த்திக வாழ்வு வாழ்கின்றவர்கள் பக்தர்கள் அல்லது அன்பர்கள் ஆகின்றார்கள். அவர்களுக்குப் பணிவிடை பண்ணுவது சரீர சம்பந்தமான தவம் ஆகிறது. அவர்களுக்குச் சரீரத்தால் வணக்கம் பண்ணுவதும் சரீர தபஸ் ஆகிறது.

குரு என்பவர் ஞானம் புகட்டுகின்றவர் ஆவார். குரு என்றால் மூத்தவர் என்ற பொருளும் உண்டு. வயதிலும், அறிவிலும், அனுபவத்திலும் மூத்தவர்களாகவிருந்து வாழ்க்கைத் தத்துவத்தைக் காட்டித் தருபவர்கள் குருமார்களாகின்றார்கள்.

யாரிடத்தில் பேரறிவும், பெருவாழ்வும் அமைந்திருக்கின்றனவோ அவர்கள் ஞானிகள் ஆகின்றார்கள். அத்தகைய பெருமக்களுக்கு நமஸ்காரம் பண்ணுவதன் மூலமாக நமக்கும் அப்பெருநிலை வந்து வாய்க்கிறது. அத்தகைய ஞானிகளைச் சரீரத்தால் வீழ்ந்து வணங்குவது சரீர சம்பந்தமான தவமாகிறது.

மனம், மொழி, மெய் ஆகிய முக்கரணங்களையும் தூய்மையாக வைத்திருப்பது தவமாகிறது. சிலர் தவம் என்கின்ற பெயரை வைத்துக்கொண்டு குளிக்காமல்இருப்பார்கள். அவர்களுடைய உடலிலிருந்து துர்நாற்றம் வீசும். அங்ஙனம் பிறருக்கு இடைஞ்சல் பண்ணும் நிலையில் உடலைத் துர்நாற்றம் எடுக்கும்படி செய்துவைத்திருப்பது தவமாகாது. உடலைச் சுத்தமாக வைத்திருப்பது தவத்தின் ஒரு பகுதியாகும்.

வாழ்வை நேர்மையாக நடத்துபவன் ஆர்ஜவம் படைத்தவனாகின்றான். "உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்" என்று வள்ளலார் குறிப்பிடுகின்றார். மனத்தில் இருப்பதுதான் சொல்லாக வடிவெடுத்து வரவேண்டும். பிறகு அச்சொல் செயலாகப் பரிணமிக்கவேண்டும். அது தான் நேர்மையாகிறது. மனம் மொழி மெய்களால் அப்படி நேர்மையைக் கடைப்பிடிப்பது தவம் ஆகிறது.

பிரம்மச்சரியமும் தவம் ஆகும். மனிதன் இந்திரிய சுகத்தை ஒதுக்கி வைத்து இந்திரிய நிக்கிரகம் பண்ணிப் பழகுகின்றவளவு பண்பாட்டில் மேலே போகின்றான். விரதங்களுள் தலையாயது பிரம்மச்சரிய விரதமாகும். அதை நன்கு அனுஷ்டிக்கின்றவன் தவத்தில் மேலோங்கியவனாகின்றான்.

பிற உயிர்களுக்குத் தீங்கு செய்யாதிருப்பது அஹிம்சை ஆகும். சரீரத்தைக்கொண்டு எந்த உயிர்களுக்கும் தீங்கு செய்யாமல் இருந்து பழகவேண்டும். மேற்கூறிய நிபந்தனைகளை நாம் நிறைவேற்றி வருவோமானால் சரீரத்தின் மூலம் நாள்தோறும் நாம் தவம் புரிந்தவர்களாகின்றோம். மேற்கூறிய பண்புகள் யாவும் பொருந்தியதாய் வாழ்க்கை அமைந்து அப்பண்புகளில் நாம் உறுதி பெற்று வருவோமானால் சரீரத்தின் மூலம் நாம் தவம் புரிந்தவர்களாகின்றோம். தவத்தில் ஈடுபடுகின்ற சரீரம் ஆரோக்கியமும், பலமும், உறுதிப்பாடும், பொலிவும் நிறைந்ததாக மாறி அமைகின்றது. சரீரம் இறைவனுடைய ஆலயம் ஆகும். எனவே அதைத் தவத்தின் மூலம் புதுப்பித்து இறைவனுக்குரிய உண்மையான ஆலயமாக மாற்றி அமைக்கவேண்டும். ஊன் உடம்பு தவத்தின் மூலமாக உள்ளிருக்கும் இறைவனுக்குரிய ஆலயமாகத் திருந்தி அமைய வேண்டும். (தொடரும்)

# தெய்வீக இயல்புகள்

(392ஆம் பக்கத் தொடர்ச்சி)

நாம் அறிவு சொருபம். அறிவு சொருபம் என்று உணர்ந்தால் பயம் உள்ளத்தை விட்டு அகலுகிறது. உலகியல் அறிவை நமக்குத் தருவதற்கு ஐந்து இந்திரியங்கள் இருக்கின்றன. அவைகளுக்கு ஞானேந்திரியங்கள் என்று பெயர். காதின் மூலம் ஓசையையும், மெய்யின் மூலம் ஊறு என்கிற உணர்ச்சியையும், கண்ணின்மூலம் ஒளியையும், நாவின்மூலம் சுவையையும், மூக்கின் மூலம் நாற்றத்தையும் கிரகிக்கின்றோம். ஐந்து இந்திரியங்கள் மூலம் ஐந்து பூதங்களையும், அப்பூதங்களாலான பொருள்களையும், புலப்படுத்துகின்ற அறிவு நமக்கு உண்டாகிறது. இது புலனறிவு எனப்படுகிறது. நாம் ஆத்ம சொருபம் என்று உணர்வது மெய்யறிவு அல்லது ஞானம் ஆகின்றது.

ஆத்ம சொருபத்தை அறிவது எப்படி? ஆத்ம சொருபத்தை அறிவதற்குப் புலனறிவு உதவாது. பொறிகளின் மூலம் புலப்படுகின்றவை ஆத்ம சொருபம் அல்ல. புலன் உணர்ச்சியைக் கடந்து மனம் அப்பால் செல்லுகின்ற பொழுதுதான் ஆத்ம சொருபம் கிரகிக்கப்படுகின்றது. ஆழ்ந்த உறக்கத்தில் இந்திரியங்களும், மனதும் வேலை செய்வதில்லை. அப்பொழுது எது இருக்கிறதோ அதுதான் ஆத்ம சொருபம். இந்திரியங்களும் மனதும் ஒடுங்கிய இடத்து எது நமக்குத் தெரியாத நிலையில் இருக்கிறதோ அது ஆத்ம சொருபம். அதை அறிவதுதான் அறிவாகிறது.

அழியாத அறிவு மயமாக இருக்கின்ற ஆத்மா ஆனந்த மயமாகவும் இருக்கின்றது. ஆழ்ந்த உறக்கத்தில் ஆனந்தமாக இருக்கின்றோம். தூங்கும்பொழுது அவ் ஆனந்தம் தெரிவதில்லை. தூங்கி விழித்தான பிறகு ஆனந்தமாகத் தூங்கினேன் என்ற உணர்வு இருக்கின்றது. தூங்கும்பொழுது உள்ள ஆனந்தத்தை அனுபவிப்பதுதான் சமாதி எனப்படும். தூக்கத்தில் அறிவு ஜடநிலையில் இருக்கிறது. சமாதியில் அறிவு தெளிவு அடைந்ததாக இருக்கிறது. ஜடநிலையில் உள்ள அறிவைச் சித் சொருபமாக மாற்றி அமைப்பதுதான் மனிதனுடைய செயலாகும்.

நாம் ஆனந்தம் என்பதையும், அழிவில்லாதவர் என்பதையும் அறிந்து கொண்டால் பயம் போய் விடுகின்றது. நம்மிடத்தில் ஆத்மீக உணர்வு ஓங்கும் பொழுது பரபோதம் ஓங்குகிறது. உடல் உணர்வு ஓங்கும் பொழுது ஜீவபோதம் உண்டாகிறது. ஜீவபோதம் பெற்றுள்ள மனிதன் பயத்துக்கு ஆளாகின்றான். ஆத்ம போதம் ஓங்குகின்ற பொழுது பயம் வெல்லப்படுகின்றது. உடல் உணர்ச்சியில் சுகம் காண்பவன் ஜீவபோதத்தை வளர்க்கின்றான். இந்திரியங்கள், மனம் ஆகியவற்றின் மூலமாக மனிதன் அடையும் சுகமானது உடல் சுகமாகிறது. ஜீவன் தன்னுடைய முயற்சியாலும், தெய்வத்தின் அருளாலும் இயற்கையை வென்று இயற்கையைத் தன்னுடைய வாழ்வுக்குச் சாதகமாக அமைத்துக் கொள்ளுகிறவன் நன்கு வாழ்ந்து வருகிறான். உடல் சுகம் பெற வேண்டும் என்று, உடல் சுகத்துக்காக எடுத்துக் கொள்ளும் முயற்சி ஜீவபோதத்தை வளர்க்கிறது. ஜீவபோதத்தை வளர்ப்பதை இன்றைக்கு நாகரிகமாகக் கருதிவருகிறோம். இன்றைய நாகரிகப் போக்கில் பரபோதம் நம்மிடம் மறைந்து கிடக்கிறது. நாம் ஆத்ம சொருபம் என்று எண்ணுவதுதான் சிறந்த நாகரிகம் ஆகும். ஜீவபோதத்துக்குத் துணை புரிபவைகளாக உள்ளவைகளையே நாகரிகம் என்று சொல்லிக்கொண்டு மனிதன் கீழ் நிலைக்குப் போய்க்கொண்டே இருக்கிறான். மனிதன் கீழ்நிலைக்குப் போன அறிகுறியே இன்றைய உலக நடைமுறையில் காண்கின்றோம்.

உலகனைத்தும் ஜீவபோதத்துக்கு அடிமைப் பட்டுக் கிடக்கிறது. ஆணவம், அகங்காரத்தின் செயல்களைத்தான் நாம் எங்கும் காண்கிறோம். ஆணவ, அகங்காரத்தின் விளைவாக உலகில் அசாந்தி நிலவுகிறது. ஆணவ அகங்காரத்தின் விளைவாகப் பண்பாடு கீழ் நிலைக்குப் போய்க்கொண்டிருக்கிறது. மனிதனுடைய பண்பாடு அவனுடைய செயல் மூலம் விளங்குகிறது. பண்பாட்டில் மேலே செல்லுகின்ற மனிதன் உயிர்கள் யாவையும் தன்

சொரூபமாகப் பாவிக்கின்றான். அப்படிப் பாவித்து உயிர்களிடத்து இணக்கம் கொள்ளு கிறபொழுது பரபோதம் மேல் எழுகிறது. ஜீவபோதம் மனிதனிடத்தில் குறுகிய நிலையை வளர்க்கிறது. பரபோதம் மனிதனிடத்தில் பரந்த மனப்பான்மையை வளர்க்கிறது. மன நிலையில் கீழ்மைப்பட்டுப் போனதன் விளைவாக ஜாதிப்பிரிவினை, மொழிப்பிரிவினை, மாகாணப் பிரிவினை முதலிய பிரிவினைச் சக்திகள் வளர்ந் திருக்கின்றன. ஜீவபோதத்தின் விளைவு மனம் குறுகிப் போகிறது. அண்டமே தனக்கு உரி யது என்ற மனப்பான்மை பரபோதத்தின் விளைவாக உண்டாகிறது.

உடலைத் தானாகக் கருதுபவன் ஜீவபோதத் தில் இருக்கின்றான். போதம் என்பது உணர்ச் சியாகும். உடல் உணர்வில் சுகம் காண் பவன் ஜீவபோதத்தை வளர்க்கின்றான். அறி வில் சுகம் காண்பவன் பரபோதத்தை வளர்க் கின்றான். உடல் உணர்ச்சியை ஒதுக்கிவிட் டால் தங்கு தடையற்ற ஆனந்தத்தை அனுப விக்கலாம். உடலை ஒதுக்கித் தள்ளுவதில் ஆனந்தம் இருக்கிறது. தூக்கமே அதற்குச் சான்றாக இருக்கிறது. தூங்குகின்றபொழுது நமக்குக் கிடைக்கும் ஆனந்தம் புறவுலகில் இருந்து வந்ததன்று. அப்பொழுது புறவுல கக் காட்சி நமக்கு இல்லை. இந்திரியங்களும், மனதும் புறவுலகோடு தொடர்பு வைப்ப தில்லை. தூங்குகின்றபொழுது புறவுலகுக் கும், நமக்கும் தொடர்பு இல்லாவிட்டாலும் ஆனந்தம் கிடைக்கிறது. தூங்கச் செல்லுவ தற்கே எல்லார்க்கும் பிரியம். தூங்கும் பொழுது உண்டாகும் ஆனந்தம் எங்கிருந்து வருகிறது? தூங்கும்பொழுது உடல் இருப்பது தெரிவதில்லை. ஆகவே அவ் ஆனந்தம் உடல் மூலம் வந்ததன்று. உலகமும் நமக்கு அப் பொழுது காட்சியில் இல்லை. எனவே உலகத் தில் இருந்தும் அவ் இன்பம் வந்ததன்று. ஜீவ போதத்தில் உள்ள மனிதன் உடல் இன்பத்தை அறிகிறான். பரபோதம் உண்டாகும் பொழுது தான் பேரின்பத்தை உணர முடியும். தூங்கு கின்ற நிலை ஜடநிலை. தூங்குகின்றவனுக்கு உடல் உணர்வுமில்லை; ஆத்மீக உணர்வு மில்லை. தூங்குகின்றவன் நாவில் சர்க்கரையை வைத்தால் அவன் இனிப்புச் சுவையை அறிய மாட்டான். அங்ஙனமே மற்ற இந்திரியங் களுக்குரிய இன்பமும் அப்பொழுது அவனுக்கு இல்லை. உடலைத் தானாக உணர்கின்ற உணர் வும் அப்பொழுது இல்லை. உலக இன்பங் களும் அப்பொழுது இல்லை. பரபோதம் எழாத இடத்து உறக்கத்தில் உள்ள அனு பவம் நமக்குத் தெரிவதில்லை. ஜாக்கிரதா வஸ்தையில் ஜீவபோதம் பெற்றிருப்பதால் உடல்இன்பத்தையும், உலக இன்பங்களையும் அனுபவிக்கின்றான். பரபோத விழிப்பு உண் டாகி விட்டால் ஆத்மீக இன்பம் நமக்கு உரியது ஆகிறது.

மனிதன் ஜீவபோதத்தை வேண்டுமென்றா லும் வளர்க்கலாம்; பரபோதத்தை வேண்டு மென்றாலும் வளர்க்கலாம். கடவுள் பற்று பரபோதத்தை வளர்க்கிறது. உலகப்பற்று ஜீவபோதத்தை வளர்க்கிறது. கடவுளையும், உலகையும் சேர்ந்து பற்றி நிற்க முடியாது. ஆத்மீக இன்பத்தைப் பெற்றவனுக்கு உலக இன்பம் இன்பமாகத் தோன்றாது. உலக இன்பத்தில் உழல்கின்ற மனது ஆத்மீக இன் பத்தில் நாட்டம் கொள்வதில்லை. ஆன்மீக இன்பத்தை நாடுகிறவர்கள் உலக இன்பத் தைத் துறக்கவேண்டும். ஸ்ரீ ராமகிருஷ்ணர், ஸ்ரீ சாரதாதேவியார் வாழ்வில் தூய்மையே இலங்குகின்றது. இருவரும் ஆன்மீக இன்பத் தில் பேரார்வம் உடையவர்களாக விளங்கு கிறார்கள். ஸ்ரீ ராமகிருஷ்ணர் பாரமார்த்திகப் பெருவாழ்வில் ஈடுபட்டு இருந்ததற்கு இடை யில் ஸ்ரீ சாரதாதேவியாரைத் தம்முடன் இருந்து வாழ்க்கை நடாத்துதற்கு அனுமதி தந்தார். ஸ்ரீ சாரதாதேவியாருடன் வாழ்ந் திருந்த காலத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தம் உள் ளத்தை ஓர் இரவு சோதித்துப் பார்த்தார். ஸ்ரீ சாரதாதேவியாருடன் தனித்திருந்த நள் ளிரவுஒன்றில் தம்மனதைப் பார்த்து "மனமே, பரபோதத்தில் விளைகின்ற பர இன்பம் உனக்கு வேண்டுமா? ஜீவ போதத்தில் உண்டாகின்ற சிற்றின்பம் உனக்கு வேண்டுமா? பேரின் பத்தை உன்னிடத்தில் எப்பொழுது வேண்டு மென்றாலும் பெற்று அனுபவிக்கலாம். சிற்றின் பத்தைப் பெறுவதற்குக் கருவியாக இருக்கும் சாரதையின் உடல் உனக்கு உரியதாக இருக் கிறது. உனக்குச் சிற்றின்பம் வேண்டுமா?

பேரின்பம் வேண்டுமா? உள்ளதை உள்ளபடி சொல்.'' இங்ஙனம் மனதைக் கேட்ட வண்ண மாகக் கையைத் தூக்கினர். அவர் மனம் உடல் உணர்வையெல்லாம் கடந்து பேருணர்வு வசப் பட்டதாக ஆகிவிட்டது. அன்றிரவு முழுவதும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் சமாதியில் ஆழ்ந்து பேரின் பத்தை நுகர்ந்த வண்ணம் இருந்தார். ஸ்ரீ ராம கிருஷ்ணர் தம் மனதைப் பண்படுத்தியதின் விளைவாகப் புலனின்பத்தை ஒதுக்கித் தள்ளி விட்டுப் பரவுணர்வு வசப்பட்டுப் பேரின்பத்தை அனுபவித்தார். பர இன்பத்தை நாடிப்போன ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உள்ளம் சிற்றின்பத்தை ஒதுக்கித் தள்ளியது.

"உலகம் அநித்தியம், கடவுள் ஒருவரே நித் தியப்பொருள். அநித்தியமான இவ்வுலகத்தில் நாம் செய்கின்ற செயல்களும் அநித்தியமான வை'' என்று வாய் வேதாந்தம் பேசிக்கொண்டு ஒருவர் தவறான ஒழுக்கத்தில் ஈடுபட்டிருந்தார். அவர் ஸ்ரீ ராமகிருஷ்ணரைச் சந்தித்தபொழுது "உலகம் அநித்தியம் என்று சொல்லிக் கொண்டு நீ பொருந்தாத செயலில் ஈடுபட் டிருப்பது தவருகும். உலகம் அநித்தியம் என்று சொல்லுவதோடு அதை நீ ஒதுக்கித் தள்ளவும் வேண்டும்'' என்ருர் ஸ்ரீ ராமகிருஷ் ணர். "இவ்வுலகம் அநித்தியம்; என் உடல் அநித்தியம்; அநித்தியமான உடலின் மூலம் அநித்தியமான உலகில் நிகழும் செயல்களும் அநித்தியம்'' என்ருர் அவர். "உன் செயல் அருவருக்கத் தகுந்தது. உன் பேச்சை நான் காது கொடுத்துக் கேட்கமாட்டேன்'' என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவரைக் கடிந்துகொண் டார்.

மனம் முற்றிலும் பரநாட்டம் கொள்கிற பொழுதுதான் உள்ளத்தில் பேருணர்ச்சி எழு கிறது. உள்ளத்தில் மாறுபட்ட இரண்டு உணர்ச்சிகளை ஏககாலத்தில் பெற்றிருக்க முடியாது. கோபவசப்பட்டு இருப்பவனுக்குச் சாந்தியில்லை. சாந்தியுற்று இருப்பவனுக்குக் கோபமில்லை. இன்பத்தில் இருப்பவனுக்குத் துன்பம் இல்லை. துன்பத்தில் இருப்பவனுக்கு இன்பம் இல்லை. ஜீவபோதம் பெற்றிருப்ப வனுக்குப் பரபோதம் இல்லை. பரபோதம் ஓங்கப் பெற்றவனுக்கு ஜீவபோதம் இல்லை. பரபோதம் மேலோங்கி எழும்பொழுது பயம் ஒழிகிறது. ஜீவபோதம் தடித்ததாகும்போது உடல் உணர்வு ஓங்குகிறது. உடல் இன்பத் தில் அப்போது நாட்டம் உடையவனுக இருக் கிருன். உடல் போய்விட்டால் தனக்குரிய இன்பமே போய்விட்டது என்று கவலைப்படு கின்ருன். உடல் மறைவு இன்பத்துக்குத் தடை என்று கருதுகின்ருன். உடல் உணர்வைத் தாண்டிப்போன நிலை பரபோதம் பெற்ற நிலை. அந்நிலையில் உடல் அழிவதைக் குறித்து அவனுக்குக் கவலையில்லை. தாம் அழியாத ஆத்ம சொரூபம்; தாம் ஆனந்த சொரூபம்; தாம் அறிவு சொரூபம் என்று ஆழ்ந்து எண்ணி வந்தால் உடல் உணர்வைக்கடந்து பரவுணர்வு ஓங்கப் பெறுவது சாத்தியம்.

பஞ்சேந்திரியங்களும், மனமும் ஜீவபோ தத்தை வளர்க்கவும் பயன்படுகின்றன; பர போதத்தை வளர்க்கவும் பயன்படுகின்றன. பஞ்சேந்திரியங்களையும், மனதையும் பயன் படுத்துகின்ற பாங்குக்கு ஏற்ப ஜீவபோ தத்தையோ, பரபோதத்தையோ வளர்க்கின்ற வர்கள் ஆகின்ருேம். ஸ்ரீ ராமகிருஷ்ணர் தமக்கு அமைந்த பஞ்சேந்திரியங்களையும், மனதையும் பயன்படுத்திப் பரபோதத்தை வளர்த்தார். ஆனல் நாம் பஞ்சேந்திரியங்களையும், மனதை யும் பயன்படுத்தி ஜீவபோதத்தை வளர்த்து வருகின்ருேம். அவர் அவற்றைப் பயன் படுத்திய முறை வேறு, நாம் அவற்றைப் பயன் படுத்துகின்ற முறை வேறு. "நீ முதலில் ஈசு வரனைத் தேடு; பிறகு நீ உலகப் பொருள் களைத் தேடலாம்'' என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்துள்ளார். அவர் அப்படிக் கூறியதின் கருத்து என்னவென்ருல் பஞ்சேந்திரியங்களை யும் மனதையும் கடவுள் பொருட்டுப் பயன் படுத்துவதற்கு நாம் கற்றுக்கொள்ள வேண் டும். அவைகள் நமக்குக் கடவுளைத் தேடுவ தற்காகத்தான் அமைந்திருக்கின்றன என்று அறிந்துகொள்ள வேண்டும். கடவுளைத் தேடிக் கொண்டு நாம் எங்கும் செல்லவேண்டியதில்லை. இருக்கின்ற இடத்தில் இருந்துகொண்டே நாம் அவரைத் தேடலாம். பஞ்சேந்திரியங் களையும், மனதையும் சரியாகப் பயன்படுத்து வதுதான் கடவுளைத் தேடுவதாகிறது. கட வுள் சம்பந்தமான எண்ணங்களைப் பெருக்கிக் கடவுள் ஆசையை வளர்க்கவேண்டும். பர

போதம் ஓங்கப் பெறும்பொழுது ஜீவபோதம் தேய்கிறது. பரபோதம் ஓங்குவதற்கும், ஜீவ போதம் தேய்வதற்கும், பஞ்சேந்திரியங்களை யும் மனதையும் கடவுள் வழிபாட்டில் பயன் படுத்த வேண்டும். உலக விஷயங்களில் மன தையும், பஞ்சேந்திரியங்களையும் பயன்படுத்தி னால் ஜீவபோதம்ஓங்கிப்பரபோதம் மறைகிறது. ஆக மனதையும், இந்திரியங்களையும் பயன் படுத்துதற்கேற்ப ஜீவபோதம் அல்லது பர போதம் வளர்கிறது.

தெய்வீக உணர்ச்சியை வாங்குகின்ற பாங் கில் பஞ்சேந்திரியங்களைப் பயன்படுத்தி னால் அவை பரபோதத்தை வளர்க்கின் றன. தக்ஷிணேஸ்வர ஆலயத்தில் இருந்த அம்பிகை விக்ரஹம் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடத்துப் பரபோதத்தை வளர்த்தது. காளி கோயிலில் அவர் தம்மை மறந்த நிலையில் தெய்வீக பாவனையில் செயல் புரிந்து வந்தார். தம்மை மறந்து தெய்வ எண்ணத்தில் மூழ்கி அவர் இந்திரியங்களும் மனதும் செயல்பட்டு வந் தன. அந்நிலையில் சுயநலத்துக்குச் சிறிதும் இடமில்லை. செய்கின்ற செயல்கள் எல்லாம் கடவுள் எண்ணத்தில் நிகழ்ந்துவந்தன. தனக் கென்றும், தன் குடும்பத்துக்கென்றும் செய் கின்ற செயல்கள் ஜீவபோதத்தை வளர்க் கின்றன. உலகுக்கென்றும், தெய்வத்துக்கென் றும் செய்கின்ற செயல்கள் பரபோதத்தை வளர்க்கின்றன. நம் வாழ்வை உலகுக்கென் றும் தெய்வத்துக்கென்றும் ஒப்படைத்துப் பழகவேண்டும். தாய் தன் குழந்தையின் பொருட்டுத் தனக்குரிய இன்பத்தைத் தியா கம் பண்ணுகின்றாள். தெய்வத்தின்பொருட்டு நமக்குரிய உலக இன்பத்தைத் துறக்கவேண் டும். உயிர்கள் இன்பம் அடையவேண்டும் என்று எண்ணி நாம் பாடுபட்டு வந்தால் அது பரபோதத்தை வளர்க்கிறது. பரபோதம் ஓங்கப் பெற்றால் உள்ளத்தைவிட்டுப் பயம் அறவே ஒழிகிறது.

ஆனந்தம் புறவுலகில் இருந்து நமக்குக் கிடைக்கிறது என்று நினைக்கக் கூடாது. ஆனந்தம் நம்மிடத்திலேயே இருக்கிறது. சுயநலச் செயல்கள் ஒழிந்து பரநலச்செயல் கள் ஓங்கும்பொழுது நம்மிடத்திலுள்ள ஆனந் தத்தை அனுபவிக்கலாம். நம் உடலை நாம் எப்படி நம்முடையது என்று கருதுகிறோமோ அப்படியே ஒவ்வொரு உயிரையும் நம்முடைய தாகக் கருதுதல் வேண்டும். ஸ்ரீ ராமகிருஷ் ணர் நோய்வாய்ப்பட்டிருந்தபொழுது கஞ்சி ஆகாரம்தான் அருந்த முடிந்தது. ''நீங்கள் நோயைக் குறைப்படுத்த வேண்டும் என்று அம்பிகையிடம் பிரார்த்தனை செய்துகொள்ளக் கூடாதா?'' என்று பக்தர்கள் அவரைக் கேட் டார்கள். பக்தர்கள் கேட்டுக்கொண்டதற் கேற்பப் பிரார்த்தனை செய்யவேண்டும் என்ற எண்ணம் எழுந்த உடனே "ஒரு தொண்டை யின் மூலமாகத்தான் நீ அருந்துகின்றாயா? உயிர்கள் எல்லாம் அருந்துவது நீ அருந்து வது ஆகாதா'' என்று அம்பிகை ஸ்ரீ ராம கிருஷ்ணரைக் கேட்டாள். இவ்வாறு அம்பிகை கேட்டதும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் வெட்கப்பட் டார். பரபோத உணர்வில் உயிர்கள் அனைத் தும் நம்முடைய சொரூபம் என்று பாராட்டு கின்ற நிலை வருகிறது. நம்மைப் பார்த்து நாமே பயந்து விடுவதில்லை. உலகமனைத்தும் நம்முடைய சொரூபம் என்று உணருகின்ற பொழுது யார் யாரைப்பார்த்துப் பயப்படு வது? பரபோதத்தில் நாம் வேறு; உலகம் வேறு என்கின்ற பேத உணர்வு ஒழிந்து யாவும் நாம் என்கின்ற ஐக்கிய உணர்வு ஓங்கு கின்றது. அப்பொழுது பயம் அறவே ஒழி கிறது. பரபோத உணர்வை வளர்ப்பது வாழ்வின் அடிப்படைக் கோட்பாடாக அமைய வேண்டும். பரபோத உணர்வை வளர்க்கப் பாடுபட்டால் நம் உள்ளத்தை நல்லமுறையில் பண்படுத்தியவர்கள் ஆகிறோம். 'முயற்சி திரு வினையாக்கும்' என்பதற்கு ஏற்பப் பரபோத உணர்வு பெற்றவர்களாகிப் பயத்தை நீக்கு கின்றோம். ஆத்மசொரூபத்தைப்பற்றிய சிந் தனையை உள்ளத்தில் வளர்ப்பதற்கேற்பப் பயம் தானாக நீங்குகிறது. ஒளி வந்தால் இருளுக்கு இடமில்லை. உள்ளத்தில் உயர்ந்த சிந்தனை இடம்பெற்றால் கீழான எண்ணம் அகன்று விடுகின்றது. நாம் அழியாதவர்கள்; ஆனந்த சொரூபிகள்; பேரறிவு சொரூபமானவர்கள் என்பதை ஆழ்ந்து சிந்தனை செய்தால் அபயம் என்னும் தெய்வீக இயல்பில் நிலைத்து நிற்கின்றவர்களாகின்றோம்.

பண்பட்ட நிலத்தைப் பயிர்செய்வதற்குத்

தேர்ந்தெடுக்கவேண்டும். விதைப்பதற்கு முன்பு நிலத்தைப் பன்முறை உழவேண்டும். உழுவதின் மூலம் மண் பொதுபொதுப்புடையதாகிறது. பிறகு மழை பெய்யும்பொழுது நிலத்தில் விதையைப்போடவேண்டும். உள்ளத்தில் உயர்ந்த எண்ணத்தை எண்ணுவது நிலத்தில் நல்ல விதையைப் போடுவதற்கு நிகராகும். பண்பட்ட நிலத்தில் விதைத்த விதை நல்ல பலனைக்கொடுப்பது போன்று தூய உள்ளத்தில் எழும் உயர்ந்த எண்ணங்கள் விரைவில் நல்ல விளைவைக் கொடுக்கும். நிலத்தை உழுது பண்படுத்துவது போன்று உள்ளத்தைத் தூயதாக்குவது முக்கியமானதாகும். ஏசுநாதர் பகர்வதாவது: "விதைகள் சில பாறையில் விழுகின்றன. இன்னும் சில விதைகள் கட்டாந்தரையில் விழுகின்றன. இன்னும் சில விதைகள் பண்பட்ட நிலத்தில் விழுகின்றன. பாறையில் விழுந்த விதை முளைக்காது. கட்டாந்தரையில் விழுந்த விதை முளைவிட்டுக் கருகிப் போகும். பண்பட்ட நிலத்தில் விழுந்த விதை நல்ல பலனைக் கொடுக்கும்." சிலர் உள்ளம் பாறாங்கல்லுக்கு நிகராக இருக்கிறது. அவர்களுடைய உள்ளத்தில் அருளுரை இடம்பெறுவதில்லை. இன்னும் சிலருடைய உள்ளம் கட்டாந்தரைக்கு நிகராக இருக்கிறது. அவர்களுடைய உள்ளத்தில் புகுத்தப்படும் அருளுரை சிறிதுநேரத்திற்குள் மறைந்து விடுகிறது. யாரோ சிலருடைய உள்ளம்தான் பண்பட்ட நிலத்துக்கு நிகராக இருக்கிறது. அவர்களுடைய உள்ளத்தில் செலுத்தப்படும் அருளுரைகள் நல்ல பலனைக் கொடுக்கின்றன.

மனத்தூய்மை உடையவனாக விளங்குதல் மனிதன் பெறும் பேறுகளில் பெரிய பேறு ஆகிறது. தூய மனம் உயிர்களைத் தன்பால் இழுக்கிறது. தூயமனதை இறைவன் கவர்ந்து கொள்கிறார். இரும்புத்தாது தூயது ஆக, ஆக அது காந்தத்தால் இழுக்கப்படுவது போன்று,மனம் தூய்மை ஆக, ஆக அது பரத்தினால் இழுக்கப்படுகிறது. உள்ளம் தூய்மை ஆகின்ற அளவு நாம் பரத்துக்கு உரியவர்களாகின்றோம். மனிதன் எத்தகைய நூல் கல்வி கற்றிருக்கிறான் என்பதையோ, எவ்வளவு பொருள் படைத்திருக்கிறான் என்பதையோ, புகழ், கீர்த்தி எவ்வளவு வாய்ந்தவனாக இருக்கிறான் என்பதையோ கடவுள் பார்ப்பதில்லை. மனிதன் கள்ளம், கபடமற்ற எத்தகைய தூய உள்ளம் படைத்திருக்கிறான் என்பதையே கடவுள் பார்க்கிறார். தூய உள்ளம் படைத்தவர்கள் இறைவனுடைய அருளைப் பெறத் தகுதியுடையவர்களாகிறார்கள்.

மனதைத் தூய்மைப்படுத்துவதற்குப் பல உபாயங்கள் இருக்கின்றன. தூய எண்ணம் எண்ணுவது மனதைத் தூய்மைப்படுத்துகிறது. சொல்லுக்கும் எண்ணத்துக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. சொல்லுக்கேற்ற எண்ணம் உள்ளத்தில் உதிக்கிறது. கோபமான சொல் உள்ளத்தில் கோபத்தை உண்டாக்குகிறது. அன்பான சொல் உள்ளத்தில் அன்பை உண்டாக்குகிறது. இறைவனுடைய நாமத்தைச் சொன்னால் இறைச் சிந்தனை உள்ளத்தில் உண்டாகிறது. தெய்வத்தினுடைய நாமத்தைத் திரும்பத் திரும்பச் சொல்லுவது ஜபம் என்னும் பெயர் பெறுகிறது. ஓயாது உள்ளத்தில் ஜபம் நிகழ்ந்து வந்தால் அந்த ஜபம் உள்ளத்தைத் தூய்மைப்படுத்துகிறது. "சிவ சிவ என்கிலர் தீவினையாளர், சிவ சிவ என்றிடத் தீவினை மாளும்" என்பது திருமூலர் வாக்கு. இறைவனுடைய நாமத்தை ஓதிப் பழகுகின்ற அளவு உள்ளத்தில் உள்ள அழுக்கு நீங்குகிறது.

விதையில் இருந்து மரமும், மரத்திலிருந்து விதையும் உண்டாவது போன்று, எண்ணத்திலிருந்து செயலும், செயலில் இருந்து எண்ணமும் உண்டாகின்றன. நம்முடைய செயல் எண்ணத்துக்குக் காரணமாக இருக்கிறது. நாம் செய்த செயல்கள் எல்லாம் உள்ளத்தில் பதிவுகளாக இடம் பெற்று இருக்கின்றன. அப்பதிவுகளே எண்ணங்களாகத் தோன்றி வருகின்றன. நம் உள்ளத்தில் பதிவான செயல்கள் நம்மையறியாது எண்ணங்களாகத் தோன்றி வருகின்றன. அவ் எண்ணங்கள் நம்முடைய கட்டுத் திட்டத்திற்கு உட்படாதவைகளாக இருக்கின்றன. இப்பொழுது நாம் செய்யும் செயல்கள் எதிர்காலத்தில் நம் உள்ளத்தில் வரும் எண்ணங்களுக்கு விதைகளாக இருக்கின்றன. இனிமேல் உள்ளத்தில் எழுகின்ற எண்ணங்கள் தூய எண்ணங்களாக

அமைவதற்கும், ஏற்கனவே உள்ள தீய எண்ணங்களின் வேகம் குறைவதற்கும் ஜபம் நிகழ்ந்துவர வேண்டும். தெய்வச் சிந்தனை வருகின்ற அளவு தீவினையின் வேகம் குறைகின்றது. ''வேகம் கெடுத்து ஆண்ட வேந்தனடி வெல்க'' என்கிறது சிவபுராணம்.

தெய்வத்தின் வடிவங்களையும், தெய்வத்தின் மகிமைகளையும் ஆழ்ந்து தியானம் செய்தால் உள்ளத்தினுள் மறைந்துகிடக்கும் தீய எண்ணங்கள் நாசமடைகின்றன. ஜபமும் தியானமும் மனதைத் தூய்மைப்படுத்துவதற்குத் துணை புரிகின்றன. ஜபம் செய்வதற்குக் கால வரையறை இல்லை. இடைவிடாது இறைவனுடைய நாமத்தை உச்சரிப்பது நிகழ்ந்து வந்தால் நமக்குத் தெரியாது நம் மனது தூய்மை அடைந்துகொண்டே இருக்கிறது. ஜபம் செய்வதுதான் எளிய சாதனை ஆகிறது. கல்லாதவர்களும், பொருள்படையாதவர்களும் ஜபம் செய்யலாம். ஆரம்ப சாதகர்கள் ஜபத்தை மேற்கொள்ளுதல் அவசியமாகிறது. ஜபத்தின் மூலம் மனது தூயது ஆக ஆக அது தியானத்திற்குத் தகுதியுடையதாகிறது. சாதனையின் ஆரம்பத்திலேயே தியானத்தில் உட்காருவது கஷ்டம். ஆனல் நாம ஜபம் செய்வது சுலபம். மனம் இடைவிடாது தெய்வத்தின் நாமத்தை உச்சரித்து வந்தால் இறைவனுடைய நாமத்தைச் சொல்லுவதில் சுவை உண்டாகிறது. நாமத்தை உச்சரிப்பதில் மனம் சுவை கண்டுவிட்டால் இடைவிடாது ஜபம் நம்மையறியாது நிகழ்ந்துகொண்டே இருக்கும். ஜபசித்தி அடைகிறபொழுது தியானம் கைகூடுகிறது.

செயல் தூய்மை உடையதாக இருக்க வேண்டும். எண்ணமும், சொல்லும், செயலும் தூய்மையுடையவையாக அமைந்தால் முக்கரணங்களும் தூய்மையுடையவை ஆகிவிடுகின்றன. உயர்ந்த கருத்துக்களை எண்ணினல் எண்ணம் தூய்மை அடைகிறது. உயர்ந்த கருத்துக்களை வாயால் சொல்லுகின்றபொழுது வாக்குத் தூய்மையுடையதாகிறது. தூய்மையான சொல்லின்படி செயல் நிகழுமாயின் செயல் தூய்மையுடையதாகிறது. எண்ணம் தூய்மையாய் விட்டால் சொல் தூய்மையும், செயல் தூய்மையும் தாமாக அமைகின்றன. இனிமையான சொற்களை, உயிர்களுக்கு நலம் விளைவிக்கின்ற சொற்களை, சத்தியமான சொற்களைப் பேசிப் பழகவேண்டும். அச்சொற்கள் செயல்களாக வடிவெடுக்கும்போது அவற்றை அறச் செயல்கள் என்கின்றோம். சிந்தனை, சொல், செயலில் தூய்மை உடையவர்கள் வாழ்வைப் பெருவாழ்வாக மாற்றியமைக்கின்றார்கள். சான்றோர்கள் வாழ்க்கையைத் தூய்மைப்படுத்துவதில் கண்ணும் கருத்துமாக இருந்தார்கள். தங்கள் வாழ்வைத் தூய்மைப்படுத்தியதன் மூலம் தங்களை மேலோர் ஆக்கினர்கள். மனம், மொழி, மெய் ஆகிய முக்கரணங்களையும் தூய்மைப்படுத்திக்கொள்பவர்கள் தங்களை மேலோர் ஆக்கிக்கொள்கிறார்கள்.

பண்படுத்தப்பட்ட நிலம் பயிர் விளைவிப்பதற்கு ஆயத்தமாக இருப்பதுபோன்று, பண்பட்ட உள்ளம் ஞானத்திற்குத் தகுதியுடையது ஆகுகிறது. தூய மனதில்தான் ஞானம் உதயம் ஆகின்றது. கல்விக்கு மனத்தூய்மை அவசியம் என்று சுவாமி விவேகானந்தர் பகர்கின்றார். மனதைத் தூய்மைப்படுத்தி விட்டால் கல்வி விளையாட்டுப் போன்று வந்து அமைந்துவிடுகிறது என்று அவர் பகர்ந்துள்ளார். மேலும் அவர் பகர்வதாவது: ''கல்வித்துறை என் கைவசத்திற்கு வருமாயின் கல்வி கற்பவர்களுக்கு மனத்தூய்மையையும், மன ஒருமுகப்பாட்டையும்தான் புகட்டுவேன்''. கல்வியின் அடிப்படை இங்குதான் இருக்கிறது. நூல்களிலிருந்து பிறருடைய கருத்துக்களையெல்லாம் பெற்று மூளையில் திணித்து வைப்பது கல்வியாகாது. மனத்தூய்மையின் மூலமாகவும், மன ஒருமுகப்பாட்டின் மூலமாகவும், மனதில் உள்ள மகிமையை வெளிப்படுத்த வேண்டும். அதுதான் கல்வியின் முக்கிய பகுதி. கல்லுதல் என்றால் கிளறுதல் என்பது பொருள். நிலத்தைக் கிளறிப் பண்படுத்துவது போன்று மனதையும் பண்படுத்த வேண்டும். வயிறு வளர்ப்பதற்காகப் பெறும் கல்வி, கல்வி ஆகாது. இக்காலத்துக் கல்வியில் மனதைப் பண்படுத்துவதற்கு வாய்ப்பில்லை. இவ்வுண்மையை அறிந்த ஸ்ரீ ராமகிருஷ்ணர் பள்ளிக்கூடம் போக மறுத்துவிட்டார். ''நான் இதயக் கல்வி கற்கப் போகின்றேன். வயிற்றுப் பிழைப்புக்காகக் கற்கும் கல்வி எனக்கு

வேண்டாம்'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் பள்ளிக்கூடம் போவதை நிறுத்தி விட்டார். கல்வி பெருவாழ்வைத் தரவேண்டும். வயிற்றுப் பிழைப்புக்காகக் கல்வி கற்கவேண்டும் என்பதில்லை. மனிதனைத் தவிர மற்ற உயிர்கள் நன்ருக உண்டு வாழ்கின்றன. அவ்வுயிர்கள் எந்தக் கல்வியையும் கற்கவில்லை. எனவே கல்வியின் முக்கிய அம்சம் மனதைப் பண்படுத்துவதாக இருக்கவேண்டும். மனத்தூய்மை ஞானத்துக்கு இன்றியமையாதது ஆகிறது. சரீரத்தூய்மையும், மனத்தூய்மையும் சேர்ந்து அமைந்தால் சிறந்த வாழ்வு அமைகிறது. சரீரத்தூய்மை, மனத்தூய்மைமூலமாகத் தெய்வீக வாழ்வு நமக்குரியதாகிறது. சரீரத்தையும், மனதையும் தூய்மையாக வைத்துக் கொள்ளுதல் தெய்வீக இயல்பு ஆகும்.

அறம் இது மறம் இது என்பதைத் தெளிவுபட விளங்கிக்கொள்வதைத்தான் ஞானம் என்கின்ருேம். ஞானம் வாய்க்காதவனுக்கு அறம் இன்னதென்றே தெரியாது. ஞானத்துக்கு மனத்தூய்மை அவசியம். அறத்துக்கு இலக்கணம் வகுத்த வள்ளுவர் ''மனத்துக்கண் மாசு இலன் ஆதல் அனைத்து அறன்'' என்று பகர்ந்துள்ளார். மனதைத் தூயதாக்கு. அப்பொழுது அறம் இன்ன தென்பது உனக்கு விளங்கும். மனதைத் தூய்மைப் படுத்தாதவனுக்கு அறம் இன்னதென்பதே விளங்காது. மனத்தூய்மை அற்றவர்கள் அறநெறியினின்று பிசகிப் போவது சாத்தியம்.

இதுதான் அறம் என்று சொல்லுவதற்கு ஞானிகளும் திண்டாடுகின்ருர்கள். மனம் மாசு நீங்கப் பெற்றவர்கள் செய்வதெல்லாம் அறச்செயல்கள் ஆகின்றன. புறச்செயலை வைத்துக்கொண்டு ஒன்றை அறம் என்று சொல்லிவிட முடியாது. கொலை புரியாதிருப்பது எல்லாக் காலத்துக்கும் எல்லா இடத்திற்கும் அறம் என்று சொல்லமுடியாது. கொலை புரிதலே ஒரு இடத்திற்கு அறம் ஆகிறது. போர்க்களத்தில் கொலை புரிதல் அறம் ஆகுகிறது. பயிரோடு வரும் களையைப் பிடுங்குதல் அறம் ஆகிறது. கிருஷ்ணன் அர்ச்சுனனுக்குப் போர் புரியும்படி புகட்டுகின்ருன். அப்படிப் புகட்டியது அறம் ஆகிறது. மூட்டைப்பூச்சியைக் கொல்லலாமா? கொல்லக்கூடாதா? என்ற சந்தேகத்தை நிவர்த்தி செய்துகொள்ள ஒருவர் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் சென்ருர். அவர் சென்ற பொழுது ஸ்ரீ ராமகிருஷ்ணரே ஒரு மூட்டைப் பூச்சியைக் கொன்று கொண்டிருந்தார். அவ்அன்பர் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் கேட்காமலே சந்தேகம் நிவர்த்தியாகித் திரும்பிப் போய்விட்டார். விஷப்பாம்பைக் கொல்லலாமா? கொல்லக்கூடாதா? என்பது சிலருக்குச் சந்தேகம். காட்டுக்குச் சென்று பொந்துகளில் வாழும் பாம்புகளைத் தேடிப்பிடித்துக் கொன்ருல் அது ஹிம்சை. ஆனல் பாம்பு வீட்டுக்குள் வந்து விட்டால் அதைக் கொன்றுதான் ஆகவேண்டும்.

பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்

என்பது வள்ளுவர் வாக்கு. சில இடங்களில் பொய்ம்மையே வாய்மையாக வந்து அமையும். மனஅழுக்கு நீங்கினவர்களே பொய்யைக் கையாள முடியும். மனஅழுக்கு உள்ளவர்களிடம் அவர்களையும் அறியாது சுயநலம் இருக்கும். ஆகவே அவர்களுக்கு எது நலன் தரும் என விளங்காது. மனத்தூய்மை பெற்றவர்கள்தாம் அறம் இன்னதென்று அறிந்து கொள்ளமுடியும்.

ராமபிரான் மனத்தூய்மை படைத்தவராக இருந்ததால் அவர் செய்த செயல்கள் எல்லாம் அறச்செயல்கள் ஆகின்றன. வெளித்தோற்றத்துக்கு அவருடைய சில செயல்கள் பொருத்தமற்றவையாகத் தெரிந்தாலும் அவை அறச்செயல்களே ஆகின்றன. அவருடைய செயலில் சுயநலத்திற்குச் சிறிதும் இடம் இல்லை. சான்ருேர்களுடைய நலத்தை முன்னிட்டுச் சிலரை அழிக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. ''நல்லோர்களைக் காப்பதற்கும் அல்லோர்களை அழிப்பதற்கும், தர்மத்தை நிலை நாட்டுவதற்கும், அதர்மத்தை அழிப்பதற்கும் நான் பிறப்பெடுத்து வருகின்றேன்'' என்று கிருஷ்ணபகவான் கூறியுள்ளார். இராமபிரானுடைய செயல்கள் யாவும் நல்லோர்களைக் காப்பதும் அல்லோர்களை அழிப்பதும், தர்மத்தை நிலைநாட்டுவதும் அதர்மத்தை அழித்துத் தள்ளுவதுமாக இருந்தன. அவர் கோதண்டம்தான் தமக்கு ஜபமாலை என்ருர். (தொடரும்)

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம் - 123

709. सदाशिवपतिव्रता சதாசிவ பதிவ்-ரதா—சதாசிவத்தின் வாழ்க்கைத் துணைவி.

உலக நிலையில் வைத்து இயம்புமிடத்துத் தன் கணவனைக் குறிக்கோளாகக் கருதும் கற்பரசி ஒருத்தி தன்னுடைய உடல், பொருள், ஆவி அனைத்தையும் தன் தலைவனுக்கே உரியவைகள் ஆக்குகின்றாள். தன் கணவனைத் தவிர வேறு எவரிடத்தும் அவள் தன் கருத்தைச் செலுத்துவதில்லை. கணவன் சேவையிலேயே சர்வகாலமும் அவள் மூழ்கியிருக்கிறாள். அந்தச் சேவையையே நெறியாகக் கொண்டு தனக்குக் குறியாயிருக்கும் கணவனிடத்துத் தன்னை முற்றிலும் ஒப்படைக்கிறாள். இத்தகைய பதிவிரதைகள் பலர் பாருலகில் தோன்றியுள்ளார்கள். அன்னவர்களின் பாங்குகளைச் சரியாக ஆராய்ந்து அறிந்துகொண்டால் அன்னை பராசக்தி பரமசிவனுக்கு எங்ஙனம் பதிவிரதையாகின்றாள் என்பது ஓரளவு புலனாகும். கணவனும் மனைவியும் வடிவத்தில் இருவர் எனினும் கருத்து வேறுபாடு அவர்களுக்கிடையில் இல்லை. மனிதன் படைத்துள்ள இரண்டு கரங்கள் ஒன்றையொன்று சார்ந்திருக்கின்றன. ஒன்றோடொன்று முரண்படுவதில்லை. இரண்டு கரங்களும் ஒன்று சேர்ந்தே செய்வதற்குரிய காரியங்களைச் சாதிக்கின்றன. அங்ஙனம் அம்பாள் இறைவனுடைய இயல்பிலே ஒன்றுபட்டவளாய் இருந்துகொண்டு இறைவனுடைய திட்டங்களையே நிறைவேற்றுகின்றாள்.

இனிப் பாரமார்த்திகத் தத்துவத்தை ஆராய்ந்து பார்க்குமிடத்து அன்னை பராசக்திக்குச் சதாசிவ பதிவ்ரதா என்னும் நாமம் வாய்த்திருப்பது முற்றிலும் பொருத்தமானதே. பரம்பொருளும் அதன் மகிமைகளும் இணைபிரியாதவைகளாம். பரப்பிரம்மமும் அதனிடத்து அமைந்துள்ள சக்தியும் அத்வைதமாய், இரண்டற்ற நிலையில் இலங்கிக்கொண்டிருக்கின்றன. ஸர்ப்பம் ஒன்று சுருண்டு படுத்திருக்கும்பொழுது அது பிரம்மம் என்று அழைக்கப்பெறுகிறது. அதே ஸர்ப்பம் வளைந்து வளைந்து போகின்றபொழுது அதற்குச் சக்தி என்னும் நாமம் அமைகிறது. பிரம்மமும் அதனுடைய சக்தியும் அத்வைதமாகவும் அபேதமாகவும் அமைந்திருக்கின்றன. சூரியன் வேறு, சூரியப் பிரகாசம் வேறு அல்ல. அக்னியும் அதனிடத்து அமைந்துள்ள உஷ்ணமும் இணைபிரியாதவைகள். ரத்தினம் ஒன்று ஜ்வலித்துக்கொண்டிருக்கிறது. ஜ்வலிக்கும் தன்மையை ரத்தினத்திலிருந்து பிரிக்கமுடியாது. பால் வெண்மை நிறமுடையதாயிருக்கிறது. வெண்மை நிறத்தைப் பாலினின்று பிரிக்க முடியாது. இக்கோட்பாடுகளை ஆழ்ந்து ஆராயுமிடத்துச் சதாசிவத்துக்கும் அன்னை பராசக்திக்குமிடையிலுள்ள இணக்கம் நன்கு புலனாகிறது. சக்தியினின்று சிவத்தைப் பிரிக்க முயன்றால் சிவம் சவமாகப் போகிறது. சக்தி தேவியோ ஆதரவு ஏதும் அற்றவளாக வெறும் சூனியமாகப் போகின்றாள். ஆனால் அத்தகைய பிளவு ஒருபொழுதும் ஏற்படுவதில்லை. சிவத்தினின்று சிவமகிமைகளைப் பிரித்தெடுக்க முடியாது. சிவத்துக்குப் புறம்பாகச் சிவனுடைய மகிமைகளுக்கு இருப்பிடம் ஏதுமில்லை. சதாசிவத்தையே சார்ந்திருப்பதால் பேர் ஆதரவு வாய்க்கப்பெற்றவளாக அம்பிகை இலங்குகின்றாள். அம்பிகையின் அற்புதமான மகிமைகளை முன்னிட்டுச் சிவனுக்குச் சோபைகளனைத்தும் அமையப்பெற்றவைகளாய் இருக்கின்றன. மெய்ப்பொருளின் சொருப தியானத்துக்கு ஏற்ற இலட்சியமாய் அமைந்திருப்பது சதாசிவ பதிவ்ரதா என்னும் நாமத்தில் பொலிந்துகொண்டிருக்கின்ற உட்பொருள்.

710. सम्प्रदायेश्वरी சம்ப்ரதாயேச்வரீ—சம்ப்ரதாயத்துக்கு ஈஸ்வரியாக இருப்பவள்.

மேலான கொள்கைகளும், கோட்பாடுகளும், ஐதிகங்களும் மானுட சமுதாயங்களில் இருக்கின்றன. இவை யாவும் நாடுகளுக்குரிய ஐதிகங்களிலும் குடும்ப தர்மங்களிலும் குரு சிஷ்ய சம்ப்ரதாயங்களிலும் சர்வகாலமும் காப்பாற்றி வரப்படுகின்றன. மேலாம் கொள்கைகளும் கோட்பாடுகளும் அடிக்கடி மாறுபடும் பாங்குடையவைகள் அல்ல. அவைகளை உறுதியாகக் கடைப்பிடிக்குமளவு சமுதாயம் மேன்மையுற்று மிளிர்கிறது. தீயின் தர்மம் தகிப்பது. தகிக்கும் தன்மை தீயை

விட்டு மறைந்துபட்டுப்போனால் தீ தன் பெருமையை இழந்துவிடும். மற்ற பூதங்களுக்கும் அவ்வவைகளுக்குரிய தர்மங்கள் இருக்கின்றன. உயிர்வகைகளுக்கும் ஏற்ற வாழ்க்கை முறைகள் இருக்கின்றன. வாழ்க்கை முறைகளில் உச்சநிலை எய்திருப்பவன் மனிதன். மனிதனுடைய பண்புக்கும், ஸ்தானத்துக்கும் ஏற்றபடி சுதர்மங்கள் பலப்பல இருக்கின்றன. அவரவர்க்குரிய தர்மத்தை நன்கு கடைப்பிடிப்பது உசிதம். தீ தன் தர்மத்தைக் காப்பது போன்று மக்களும் சுதர்மத்தைக் காக்கக் கடமைப்பட்டிருக்கின்றனர். பண்பாட்டில் மனிதன் மேல்நிலைக்கு வருவதற்கேற்ப அவனுடைய சுதர்மமும் மேலானதாகிறது. சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். பொருளைத் தேடுபவன் வைசியன். அருளைத் தேடுபவன் அந்தணன். இது பண்பாட்டுக்கு ஏற்ற சம்பிரதாயம். இந்தச் சம்பிரதாயத்தைவிட்டு மனிதன் பிசகலாகாது. பிசகுவதற்கேற்ப மனிதன் மேல்நிலையை இழந்து கீழ்நிலை எய்துகிறான். அன்னை பராசக்தி மானுட சமுதாயங்களின் சம்பிரதாயங்களை இனிது காத்துவருகின்றாள். உலகிலுள்ள சமுதாயங்களில் சிற்சில காலக்ரமத்தில் அழிந்துபட்டுப் போகின்றன. தர்மத்தினின்று பிசகுவதற்கேற்பக் கீழ்மையோ, அல்லது அழிவோ வந்து வாய்க்கிறது. அது ஈசுவரியின் ஆதிக்கத்தை நன்கு விளக்குகிறது. தகுதி அற்ற எதையும் அவள் மேல்நிலையில் வைப்பதில்லை. அந்தந்த மனிதன் படைத்துள்ள தகுதிக்கேற்ற ஸ்தானத்தில் அவள் அவனை வைக்கின்றாள். அது சம்பிரதாயத்தின் மகிமையாம். பண்பாட்டுக் கேற்ற ஸ்தானம் என்னும் சம்பிரதாயத்தினின்று எம்மனிதனும் தப்பித்துக்கொள்ள முடியாது. நெறிபிறழாது அந்தந்த ஸ்தானத்துக்குரிய நிலையில் அம்பிகை உயிர்வகைகளை வைத்து ஆட்சி புரிவதால் அவள் சம்பிரதாயேச்வரீ என இயம்பப்படுகிறாள்.

711. साधु சாது—பொருத்தமானது என்பது இந்த நாமத்தின் உட்பொருள். இது அம்பிகைக்கு முற்றிலும் பொருத்தமானது.

எந்தெந்தப் பொருள் எத்தகைய தன்மை வாய்ந்ததாக இருக்கிறதோ அதை அவள் உள்ளபடி விளக்குகிறாள். கல் என்று ஒரு சொல் இருக்கிறது. ஒன்றுக்கும் உதவாது பூமியில் ஆங்காங்கு கிடக்கும் சிறுசிறு கட்டிகளும் கல் எனப்படுகின்றன. கட்டடத்திற்கு உதவும் பெரிய பெரிய கட்டிகளும் கற்கள் எனப்படுகின்றன. உளி வைத்துப் பிளந்தெடுப்பதற்கான கடினம் படைத்துள்ள பாறையும் கல் எனப்படுகிறது. அழகிய நிறம் படைத்துள்ள பளிங்கும் கல் எனப்படுகிறது. மரகதம் போன்ற ரத்தினமும் கல் எனப்படுகின்றது. அதனதன் பாங்கை ஒவ்வொன்றும் தானே காத்து வருகிறது. தன்னைத் தவிர வேறு எந்த வியாக்கியானமும் எப்பொருளுக்கும் தரவேண்டியதவசியமில்லை. தன் தரத்துக்குத் தானே விளக்கம் என்பதைச் சாது என்னும் அஃறிணைச்சொல் நன்கு விளக்குகிறது. அன்னை பராசக்தி இயற்கையில் யாவுமாயிருந்து அதனதன் பாங்கை அப்படியப்படியே அற்புதமாக விளக்கி வருகிறாள் என்பது இந்த நாமத்தின் கருத்து. இக்கருத்தைச் சிந்தனை பண்ணுவதும் நல்ல ஆத்ம சாதனமாகும்.

712. ई — ஈ என்னும் எழுத்து வடிவத்தில் இருப்பவள் என்பது பொருள்.

உயிர் எழுத்து வரிசையில் ஈ என்னும் எழுத்து நான்காவது இடம் பெறுகிறது. அ, ஆ, இ, ஈ இப்படி அமைந்திருப்பது முறை. ஈ என்னும் எழுத்து சக்தி சொரூபத்துக்கு இருப்பிடமாகிறது. ஈச்வர: என்னும் ஆண்பால் ஈச்வரீ என்னும் பெண்பாலாக மாறுகிறது. நாராயண: என்னும் ஆண்பால் நாராயணீ என்னும் பெண்பால் வடிவெடுக்கிறது. தேவ: என்னும் ஆண்பால் தேவீ என்னும் பெண்பால் ஆகிறது. ஆக சக்தி சொருபத்துக்குச் சின்னமாயிருப்பது ஈ என்னும் உயிர் எழுத்து. நாராயணனுடைய சகோதரியாக அன்னை பராசக்தி அமைந்திருப்பதால் அவளுக்கு நாராயணீ என்னும் பெயர் வந்துள்ளது. நாராயணன் வேறு நாராயணீ வேறு ஆகமாட்டார்கள். நாராயணனும், நாராயணீயும் சொருபத்தில் ஒன்றே. அடுத்தபடியாக சிவமும் சக்தியும் இரண்டு மூர்த்திகள் அல்லர். ஒரே மூர்த்தியை ஆண்பாலாகக் கருதுங்கால் அது சிவம். பெண்பாலாகக் கருதுங்கால் அது சக்தி. இப்பொழுது நாராய

ணனும் அம்பிகையும் சிவனும் மூன்று பெயர்களைத் தரித்து மூன்று மூர்த்திகளாகத் தென்படுகிறார்கள் என்றாலும் வஸ்து ஒன்றே.

ஈ என்னும் நான்காவது உயிர் எழுத்து துரியத்தைக் குறிக்கிறது. ஜாக்ரதம், சொப்பனம், சுஷுப்தி ஆகிய மூன்று அவஸ்தைகளுக்கும் ஆதாரமாயிருப்பது துரியம். ஒரு சிலர் துரியத்தைத் துரிய அவஸ்தை என்று இயம்புகிறார்கள். இக் கூற்று தத்துவத்துக்கு ஒவ்வாது. எது அவஸ்தையோ அது மாறுபடும் தன்மையது. நனவு, கனவு, உறக்கம் ஆகிய மூன்று அவஸ்தைகள் மாறி மாறியமைகின்றன. அத்தகைய மாறுபாடு துரியத்தில் இல்லை. ஆதலால் அதை அவஸ்தை எனலாகாது. அம்பிகை தானே துரியமாக இலங்குகின்றாள். துரியம் என்னும் சொல் மெய்ப்பொருளாகிய பிரம்மத்தைக் குறிக்கிறது. ஆதலால் சிவன், சக்தி, நாராயணன் ஆகிய மூன்று மூர்த்திகளும் பிரம்மமே ஆகின்றனர். இந்த மூன்று மூர்த்திகளுள் ஆராதனைக்கு நாம் யாரை எடுத்துக்கொண்டாலும் பரப்பிரம்மத்தையே ஆராதிக்கிறோம். ஈ என்னும் உயிர் எழுத்தில் இந்த மேலாம் கோட்பாடு அடங்கியிருக்கிறது.

ஈ என்னும் எழுத்து தர்மத்தைச் சுட்டிக்காட்டுகிறது. அம்பிகை தானே அகிலாண்டமெங்கும் தர்மமாக இலங்குகின்றாள். தர்மத்தை உடைத்திருக்கிற மூர்த்தி தர்மீ என இயம்பப்பெறுகிறார். தர்மீயும் தர்மமும் இரண்டு ஆகமாட்டா. பரப்பிரம்மமானது தர்மீயாகவும், தர்மமாகவும் இலங்கிக் கொண்டிருக்கிறார் என்னும் கோட்பாடு இந்த எழுத்தில் அடங்கியிருக்கிறது.

ஈ என்னும் எழுத்து காமகலையைக் குறிக்கிறது. உயிர்களனைத்தும் காமத்தை வளர்த்து வருகின்றன. காமம் என்னும் சொல் மேல்நிலை கீழ்நிலை ஆகிய இரண்டு நிலைகளிலும் உள்ள ஆசையைக் குறிக்கிறது. தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் ஆகிய நான்கும் புருஷார்த்தங்கள் எனப்படுகின்றன. இந்த நான்கனுள் நாலாவது புருஷார்த்தமாகிய மோக்ஷம் குறியாக அமைந்திருக்கிறது. அது நெறியாகாது. தர்மம் அர்த்தம் காமமாகிய மூன்றும் நெறிகளாக அமைந்திருக்கின்றன. இம்மூன்றனுள் காமம் என்னும் நெறி உயிர்வகைகளை உயர்நிலைக்குத் தூண்டுகிற சக்தியாம். உயிர்களனைத்தும் மேல் நிலையடையவேண்டுமென்று விரும்புகின்றன. அந்த விருப்பமே காமம் என்னும் பெயர் பெறுகிறது. பிரபஞ்சத்திலுள்ள எந்த உயிராவது தான் அடைந்துள்ள நிலையில் திருப்தியடைந்திருப்பதில்லை. ஒருவேளை திருப்தியடைந்திருந்தால் அது தாற்காலிகமானது. வீடுபேறு அல்லது முக்தி அடையும்வரையில் எந்த உயிர்க்காவது இடை வழியில் நிரந்தரமான ஓய்வு கிடையாது. ஸ்தாவர ஜங்கமங்களாக இலங்குகின்ற உயிர்கள் யாவும் மேல்நிலை எய்துதற்கே முயன்று வருகின்றன. அத்தகைய காம கலை ஜீவர்கள் எல்லார்க்கும் பொதுவானது. தான் எய்தியுள்ள நிலைக்கு அடுத்தபடியிலிருக்கும் மேல் நிலையை எட்டினால் தனக்குப் பரமதிருப்தி உண்டாகும் என்று மானுடன் ஒவ்வொருவனும் மனக்கோட்டை கட்டுகிறான். அப்படி மேல் நிலைக்கு வந்ததும் தனக்கு அது போதவில்லை என அவன் அறிய வருகிறான். ஆதலால்தான் 'ஆசைக்கு ஓர் அளவில்லை' என்னும் கோட்பாடு வந்துள்ளது. முன்னேற்றத்தில் மேலும் மேலும் ஆசையை வளர்ப்பது அம்பிகையின் வழிபாடு ஆகிறது. ஆசைகளனைத்துக்கும் உச்சநிலையிலிருப்பது அருள் ஆசை அல்லது அருள்தாகம். யாருக்கு அருள் ஆசை ஓங்கி வளர்கிறதோ அன்னவன் அதே ஜன்மத்தில் மோட்ச சாம்ராஜ்யத்தைப் பெறுவான் என்பது தேற்றம். இத்தகைய ஆசையை அதிகப்படுத்த வேண்டுமென்று அம்பிகையிடம் பிரார்த்தனை பண்ணிக்கொள்ளவேண்டும். ஈ என்னும் ஓசையில் இத்தகைய மேலாம் கோட்பாடு அடங்கியிருக்கிறது.

ஈ என்னும் எழுத்தை நான்காம் வேற்றுமையாக மாற்றுகிற பொழுது ஐ என அது திரிவுபடுகிறது. எப்படி என்று பார்ப்போம். நாராயணி என்று அம்பிகையை வணங்குகிற பொழுது ஓம் நாராயண்யை என்று போற்றுகிறோம். ஈச்வரீயை வணங்குகின்றபொழுது ஓம் ஈச்வர்யை என்று இயம்புகிறோம். அதே பாங்கில் ஈ என்னும் எழுத்தாக அமைந்திருக்கும் அம்பிகையை ஓம் ஐ என வணங்குதல் வேண்டும்.

# அனுமன் -4

(சுவாமி ஆத்மானந்தர்)

**கிஷ்கிந்தையில் சுக்ரீவன்**

வாலி இறந்த பின்னர் சுக்ரீவன் கிஷ்கிந் தைக்கு அரசனாக முடிசூட்டப் பெறுகிறான். கார்காலம் கழிந்த பின்னர் சீதையைத் தேடு தற்குப் படையுடன் வருவதாகக் கூறி ராம னிடம் விடைபெற்றுச் செல்லுகிறான் சுக்ரீவன். ஆனால் அனுமனோ அன்பின் மிகுதியினாலும், பிரிய மனமில்லாமையினாலும் பணிவிடை செய்துகொண்டு ராமனுடனேயே இருந்துவிடு வதாகக் கூறுகிறான். ஆனால் ராமன் அதற்கு இசையவில்லை. அறிவும் ஆற்றலும் மிக்க வாலியினது ஆட்சிப் பொறுப்பினைப் புதிதா கச் சுக்ரீவன் ஏற்றிருக்கிறான். அவனுக்கு உன்னைப் போன்ற அறிவும் ஆற்றலும் மிக்க வனது உறுதுணை இன்றியமையாததாகும். சான்றோர் கூட்டுறவின்றி நல்லாட்சி செலுத்த இயலாது. சுக்ரீவனுடைய நல்லாட்சிக்கு வேண்டிய அனைத்தையும் செய்து முடித்த பின்னர் நீ என்னிடம் வரலாம். அதுபரியந்தம் நீ சுக்ரீவனுக்குத் துணையாக இருக்கவேண் டும் என்கிறான். அனுமன் அதற்கு உடன் பட்டுச் சுக்ரீவனுடன் கிஷ்கிந்தையை அடை கிறான்.

மாரிக்காலம் முடிந்துவிட்டது. ஆனால் சுக்ரீ வன் வாக்குக் கொடுத்தபடி சீதையைத் தேடு தற்குச் சேனைகளுடன் வந்து சேரவில்லை. அதற்கு மாறாக, அரண்மனையில் அரசபோகத் தில் மூழ்கிக்கிடக்கிறான். போகத்தில் ஈடு பட்டு ராம கைங்கரியத்தை மறந்து விடுகிறான். காலம் கடந்து போனதும் அவனுக்குத் தெரிய வில்லை. ராமனுக்குத் தந்த வாக்குறுதியும் அவனுடைய நினைவிலில்லை. போக வாழ்வு மனிதனை எவ்வளவு கீழ்நிலைக்குக் கொண்டு வந்து விடுகிறது என்பதற்கும், அவனை எவ் வளவு நன்றி கெட்டவனாக்கி விடுகிறது என்ப தற்கும் சுக்ரீவனது நடத்தை எடுத்துக்காட்டா கும். உயர்ந்த லக்ஷியத்துக்காக வாழ்கின்ற வர்களும், உயர்ந்த பொறுப்பினை வகிக்கின்ற வர்களும் மதுவுக்கும், பெண் ஆசைக்கும் வசப் பட்டு விடலாகாது. நல்லறிஞனையும் இந்த இரண்டும் நெறிபிறழ்ந்து கடமையினின்று வழுவச் செய்துவிடும். மதுவுக்கும் பெண் ஆசைக்கும் வசப்படும் போதெல்லாம் மனிதன் விலங்கு நிலைக்குக் கீழிறங்கி விடுகின்றான்.

சுக்ரீவன் நடத்தையைக் கண்டு ராமன் சினம் கொள்ளுகிறான். தம்பி இலக்குவனை அழைத்து, 'சுக்ரீவன் சொன்ன சொற்படி நடக்கவில்லை. நாம் செய்த உதவியை அடி யோடு மறந்து தருமநெறி தவறிவிட்டான். நீ போய் அவன் மனநிலையை அறிந்து வா. வாலியை வதைத்த கோதண்டமும் அம்பும் இருக்கின்றன. கூற்றுவனும் உண்டென்று கூறு. சொன்ன சொற்படி சேனையுடன் வரவில்லையானால் கூண்டோடு அனைவரையும் அழித்துவிடுவேன் என்று உறுதியாகக் கூறு. அவன் கூறும் விடை ஏற்றதாக இல்லையெனில், அதற்காக அவனை அழித்துவிடாமல், அவன் சொன்னதை என்னிடம் வந்து சொல்' என்கிறான்.

குறிப்பறிந்து செயலாற்றக் கூடியவன் இலக்குவன். ராமன் மனம் வருந்தும்படி யார் நடந்து கொண்டாலும் அது அவனுக்குப் பிடிக் கவே பிடிக்காது. ராமனே சினம் கொள்ளும் படி சுக்ரீவன் நடந்து கொண்டானென்றால் அவனை இலக்குவன் அழித்தாலும் அழித்து விடுவான். அதனால்தான் அவனை அழித்து விடாமல், 'அவன் சொல்லுவதை என்னிடம் வந்து சொல்' என்று கூறியனுப்புகிறான் ராமன்.

இலக்குவன் வில்லும் அம்பறாத்தூணியும் பூண்டு ராமனை வணங்கி விடைபெற்றுச் செல்லுகின்றான். அவன் வேகமான நடையே அவன் கோபத்துடன் வருகிறான் என்பதை வெளிப்படுத்துவதாக இருந்தது. இலக்குவன் வரவைக் கண்ட வானர வீரர்கள் அஞ்சியோடி அங்கதனிடம் முறையிடுகின்றனர். அங்கதன் அனுமனை அணுகி விஷயத்தைக் கூறுகிறான். சமயோசித புத்தி படைத்த அனுமன், அங்கத னின் தாய் தாரையை அரண்மனை வாயிலில் நின்று இலக்குவனை எதிர்கொள்ளும்படி கூறு கிறான். அவ்வாறே தாரை அரண்மனை வாயி லில் மாதர்புடைசூழ நிற்கிறாள். வெகுளியோடு

வந்த இலக்குவன் தாரையினைக் கண்டு தன் தாயின் நினைவெழப் பெற்றுச் சாந்த சொரூபி யாகிறான். தாரை இலக்குவனை நோக்கி, "சுக்ரீவன் ராமனுக்குத் தந்த வாக்குறுதியினை மறக்கவில்லை. சேனைகளைத் திரட்டுதற் பொருட்டு நாற்புறமும் அனுப்பிய தூதுவரை எதிர்பார்த்திருக்கிறான். இதுவே தாமதத் திற்குக் காரணமாகும். சரணடைந்தாரைத் தாயினும் சாலப்பரிந்து பேணும் நீங்கள் சற் றுக் காலதாமதமாவதைச் சகித்துக்கொள்ள வேண்டும்" என்கிறாள். அப்பொழுது அனு மன் வந்து இலக்குவனது அடிபணிகிறான். அனுமனைப் பார்த்த இலக்குவன், "மாரிக் காலம் தீர்ந்ததும் சேனையுடன் வரவேண்டு மென்று ராமன் கூறியதைநீயும்மறந்தனையோ?" என்று கேட்கிறான். அதற்கு மறுமொழியாக அனுமன், "தாயையும், தந்தையையும், ஆசாரி யனையும், அந்தணர்களையும், ஆவினத்தையும், சிசுக்களையும், பெண்டிரையும் கொன்றவர்க்கும் அவர்கள் புரிந்த கொடிய பாவத்தினின்று தப்புவதற்குப் பரிகாரங்கள் பலப்பல இருக்க லாம். ஆனல் ஒருவன் செய்த நன்றியைக் கொன்றவனுக்கு உய்வு என்பது இல்லவே இல்லை".

"சிதைவு அகல் காதல் தாயை, தந்தையை,
குருவை, தெய்வப்
பதவி அந்தணரை, ஆவை,
பாலரை, பாவைமாரை,
வதை புரிகுநர்க்கும் உண்டாம்
மாற்றல் ஆம் ஆற்றல்; மாயா
உதவி கொன்றாற்கு ஒன்றுனும் ஒழிக்கலாம்
உபாயம் உண்டோ?"

என்று கூறுகிறான்.

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்
உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு

என்ற பொய்யாமொழியும் இங்கு நினைவுறற் பாலதாகும்.

மேலும் அனுமன் இலக்குவனை நோக்கிக் கூறுகிறான்: "உங்களுக்கும் சுக்ரீவனுக்கும் இடையில் நட்பு ஏற்படுதற்குக் காரணமா யிருந்தது எனது செயலேயாகும். என்னல் ஏற்பட்ட நட்புக் கெடுமாயின் அது எனக்கு மிகுந்த வேதனையைத் தருமன்றோ? நாங்கள் உங்கள் அன்புக்குப் பாத்திரராயிருந்து என் றென்றும் தொண்டு செய்யத் தவறோம். எங் களுக்கு எல்லாம் நீங்கள்தாம். எங்கள் தவ மும், தருமமும், பெற்றோர் முதலிய யாவும் நீங்கள்தாம். தேவாதி தேவர்களும் எங்க ளுக்கு நீங்களே என்பது எங்களுடைய உள் ளக்கிடக்கையாகும். நீங்கள் இட்ட கட்டளை யைச் செய்யக் கடமைப்பட்டுள்ளோம். நீங் கள் எங்கள்மீது சினம்கொண்டால் நாங்கள் உய்வது எங்ஙனம்?"

'சுக்ரீவன் ராமன் கட்டளையைப் பொருட் படுத்தாது, புறக்கணிக்கவில்லை. படைதிரட் டுதற் பொருட்டு நாலாப் பக்கங்களிலும் பொருத்தமான தூதுவரை அனுப்பியிருக் கிறான். அவர்களுடைய வரவினை எதிர்நோக் கிக் காத்திருக்கிறான். அவன் யாதொரு உதவி யும் செய்யாதிருந்தபோது யாவரும் செய்ய இயலாத பேருதவியை நீங்கள் செய்திருக் கிறீர்கள். அதனை அடியோடு மறந்து சொன்ன சொல் தவறினல் அவன் பிறவிப்பயனை எய் தாது போவான். இறந்தபின் கொடிய நரக மும் எய்தல் பெறுவான். இதில் ஐயம் இல்லை.'

தாங்கள் முற்றத்தில் நிற்றல் முறையன்று. அரண்மனையினுள் எழுந்தருளி நீங்கள் அளித்த அரசுச் செல்வத்தினைச் சுக்ரீவனுடன் சுற்றிப் பார்ப்பீராக என்று கூறி உள்ளே அழைத்துச் செல்லுகிறான்.

இலக்குவனின் வரவை ஏற்கனவே அங்க தன் சுக்ரீவனுக்கு அறிவித்துவிட்டான். மது மயக்கந்தீர்ந்த சுக்ரீவன் இலக்குவனை அன்பி னேடு வரவேற்கின்றான். தன் செயலுக்கு வருந்தி, 'இனி ஒருபோதும் மது அருந்துவ தில்லை' என்று இலக்குவனிடம் உறுதி கூறு கிறான். சேனைகளைத் திரட்டிக்கொண்டு வரு மாறு அனுமனுக்கு ஆணையிட்டுவிட்டு இலக்கு வனுடன் ராமன் இருக்குமிடத்தைச் சென் றடைகிறான். சுக்ரீவனை நேரில் பார்த்ததும் ராமனுக்குச் சினம் தணிகிறது. சுக்ரீவன் தான் வாக்குக்கொடுத்தபடி வராததற்கு ராமனிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுகிறான். அனு மனைக் காணுத ராமன் 'அனுமன் எங்கே' என்று வினவ; அவன் நாளை சேனைகளுடன் வருவான் என்று பதிலளிக்கிறான். மாலை நேரம் நெருங்கியதும் சுக்ரீவன் ராமனிடம்

விடைபெற்றுச் செல்லுகிறான்.

அனுமன் சீதையைத் தேடச் செல்லுதல்

சுக்ரீவன் சேனைகளைத் திரட்டிக்கொண்டு அனுமனுடன் ராமன் இருப்பிடம் வந்து சேர்ந்தான். சேனைத் திரளினைக் கண்ட இராம இலக்குவர் வியப்பில் ஆழ்ந்தனர். படைத் தலைவர்கள் நாலா பக்கங்களிலும் அனுப்பப் பட்டனர். சீதையைத் தூக்கிச் சென்ற இராவணன் தென்திசை நோக்கிச் சென்றானதலால் அவன் இருப்பிடம் தென்திசையில்தான் இருக்கவேண்டும். தென்திசை நோக்கிச் செல்ல அனுமனே ஏற்றவனாவான். அங்கதன், ஜாம்பவான் முதலியோர் கூடவர அனுமன் தென்திசை நோக்கிச் செல்லவேண்டுமென்று கட்டளையிடுகிறான். சீதையைத் தேடிக்கண்டு பிடிக்கும் திறன் அனுமன் ஒருவனுக்கே உண்டு என்ற நம்பிக்கை சுக்ரீவனுக்குண்டு. மேலும் அனுமன் ராமன் அன்புக்குப் பாத்திரமானவன் என்ற திருப்தியும் சுக்ரீவனுக்குண்டு. தென்திசை செல்லும் அனுமனை நோக்கிச் சீதையைத் தேடுதற்குரிய வழிமுறைகளையும், தேடவேண்டிய இடங்களையும் எடுத்தியம்புகிறான். ராமனும் அனுமனைத் தனியே அழைத்துச் சொல்ல வேண்டியதை யெல்லாம் சொல்லியனுப்புகிறான். சீதையின் சர்வாங்க சௌந்தர்யத்தையும், அயோத்தியிலும், கானகத்திலும் நடந்த சம்பவங்கள் சிலவற்றையும் கூறுகிறான். மேலும் தன் பெயர் பொறித்த கணையாழியையும் அனுமனிடம் கொடுத்தனுப்புகிறான்.

அரசன் சுக்ரீவன் நம்பிக்கைக்கும், அறத்தின் நாயகனாகிய ராமன் அருளுக்கும் பாத்திரமான அனுமன் தன் துணைவர்களுடன் சீதையைத் தேடும் பணியில் தென்திசை நோக்கிப் புறப்படுகின்றான். விந்தியமலைச் சாரல், நர்மதை நதிதீரம், ஹேமகூட பர்வதம் முதலிய பல இடங்களில் தேடியும் சீதை தென்படவில்லை. மேலும் தென்திசை நோக்கிச் செல்லவே ஒரு பாலை நிலத்தை வந்தடைந்தனர். வெப்பம் தாளமாட்டாது தவித்தனர். கால்களைத் தரையில் ஊன்றி நடக்க முடியாது, சுட்ட சட்டியினின்று தெறித்துவிழும்நெற்பொரிகள்போன்று துள்ளித் துள்ளிக் குதித்தனராம். செய்வதறியாது திகைத்தபோது ஒரு குகைவாயில் தெரிகிறது. அனைவரும் அதனுள் நுழைந்தனர். இருளில் வழிதெரியாது தவித்தனர். அனுமனைத் தவிர ஏனையோர் அஞ்சிநடுங்கினர். அவர்களுக்கு அனுமன் அபயம் அளித்து, 'என் வாலைப் பிடித்துக்கொண்டு வாருங்கள்' என்று உள்ளே அழைத்துச் சென்றான். நீண்ட தூரம் சென்றபின் உள்ளே ஒளி தென்பட்டது. போகப் போக ஒளிமயமான நகரமொன்றைக் காணலாயினர். அங்கும் சீதையைத் தேடும் பணியில் ஈடுபட்டனர். இறுதியில் தவவேடம் பூண்ட தையல் ஒருத்தியைக் கண்டனர். சுயம்பிரபை என்பது அவள் நாமம். அனுமனோடு வந்த வானரவீரர்கள் ராமதூதர்கள் என்பதை அறிந்து அவள் மகிழ்ந்தாள். தன் வரலாறு முழுதையும் வானரர்பால் கூறினாள். அவர்களைத் தரிசித்ததினால் தன் சாபம் நீங்கப் பெற்றதாகக் கூறினாள். வானர வீரர்களை நீராடச் செய்து அறுசுவை உணவுடன் விருந்தளித்தாள். சுயம்பிரபையின் வரலாற்றினை அறிந்த அனுமன் அவள் ஸ்வர்க்கம் செல்லுதற்குத் துணைபுரிந்தான். பின்னர் அனுமனும் ஏனையவானர வீரர்களும் பலப்பலமலைச் சாரல்களையும் நதி தீரங்களையும் கடந்து சீதையைத் தேடிய வண்ணமாய்த் தெற்கு நோக்கி வந்தனர். தண்டகாரண்யம், பாண்டுமலை, கோதாவரி நதி முதலியவற்றைக் கடந்து திருவேங்கடமலையை வந்து சேர்ந்தனர். அம்மலையில் உள்ள புண்ணிய சுனைகளில் மண்ணவர்களேயன்றி விண்ணவர்களும்வந்து நீராடிவினை தீர்ப்பதைக் கண்டு வியப்புற்றனர். அங்குத் தவம் செய்யும் முனிவர் அடிபணிந்து ஆசிபெற்றனர். 'கோடு உறு மால் வரை அதனைக் குறுகுதிரேல், உம் நெடிய கொடுமை நீங்கி வீடு உறுதிர்; ஆதலினால் விலங்குதிர்' என்று சுக்ரீவன் எச்சரித்தும்கூட அனுமன் முதலியோர் வேங்கடத்தைத் தொழ விழைந்தனர். திருமால் கோயில் கொண்டுள்ள வேங்கடத்தின் பெருமை அளவிடற்கரியது. பிறவாப் பெருநிலை அடைய விரும்பும் ஆழ்வார்களும் வேங்கடத்தில் பிறப்பதென்றால் விரும்பி வரவேற்கின்றனர். திருவேங்கடத்தில் பிறக்கவேண்டுமென்று வேங்கடவனையே வேண்டுகின்றனர்.

ஆனாத செல்வத்(து) அரம்பையர்கள் தற்சூழ
வான் ஆளும் செல்வமும் மண்ணரசும்யான்
[ வேண்டேன்

தேனூர் பூஞ்சோலைத் திருவேங்கடச் சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதி உடையேன் ஆவேனே
என்றும்
செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே
நெடியானே! வேங்கடவா! நின் கோயிலின் வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தி
[ யங்கும்
படியாய்க் கிடந்து(உன்) பவளவாய் காண்பேனே

என்றும் குலசேகர ஆழ்வார் வேண்டுகின்றார்.

வானரவீரர்கள் வேங்கடத்தினின்றும் புறப்பட்டுத் தொண்டை நாடு, சோழ நாடு, சேர நாடு, பாண்டிய நாடு முதலியவற்றிலும் சீதையைத் தேடிக்கொண்டே இறுதியில் தெற்குக் கடற்கரையை வந்தடைந்தனர். சீதையைக் காணப்பெறாமையினால் செய்வதறியாது எல்லாரும் வருந்தினார்கள். 'சுக்ரீவன் கொடுத்த ஒருமாத தவணையும் தீர்ந்துவிட்டது. சுக்ரீவன் ஆக்ஞை மறக்கமுடியாதது; மறுக்கவும் இயலாதது. அதனால் உயிரை மாய்த்துக்கொள்வது தான் நல்லது. நான் எனது உயிரைவிட்டு விடுகிறேன். நான் உயிர்விட்ட செய்தியை என் தந்தைக்குத் தெரிவித்துவிடுங்கள்' என்றான் அங்கதன். அது கேட்ட ஜாம்பவான், 'நீ இறந்தது தெரிந்தால் உன் தந்தை சுக்ரீவனும், தாய் தாரையும் இறந்துபோவார்கள். வானர ராஜ வம்சத்தில் உன்னையன்றிச் சந்ததி வேறு யாருமில்லை. ஆதலால் வானர சாம்ராஜ்யம் அரசரின்றிப் பாழ்பட்டுவிடும். நீ இறத்தல் கூடாது. நாங்களெல்லாரும் மடிந்துவிடுகிறோம். அந்தச் செய்தியை நீ போய் சுக்ரீவனுக்குத் தெரிவித்துவிடு' என்றான். அப்பொழுது அனுமன் முன்வந்து மொழியலானான்; 'நாம் பூலோகத்தில் சிறு பகுதியிலேயே தேடியுள்ளோம். அதற்குள் சலிப்படைந்துவிடலாகாது. காலம் கடந்ததற்குச் சுக்ரீவன் கோபம் கொள்ளான். சீதாபிராட்டியைக் கண்டுகொண்டால் சுக்ரீவன் மகிழ்ச்சிகொள்வானேயன்றி வெகுளான். இப்பொழுது இறத்தல் ஏற்ற செயலன்று. இன்னும் பல இடங்களில் சீதையைத் தேடுவோம். அப்படித் தேடியும் சீதையைக் காணப்பெறாவிடில் சடாயுவைப்போல் சாதலை மேற்கொள்வோம்' என்றான். அப்போது அங்கு வசித்துக்கொண்டிருந்த சடாயுவின் தமையன் சம்பாபதி, தன் தம்பி சடாயு இறந்த செய்திகேட்டுத் திடுக்கிட்டு 'என் தம்பி எப்படி இறந்தான்?' என்று அனுமனைக் கேட்டு கண்ணீர் வடித்தான்.

வஞ்சனையால் சீதையைக் கவர்ந்து சென்ற இராவணனுடன் போரிட்டு மாண்டான். தேவ தேவன் தந்த தெய்வ வாளால் இராவணனால் வெட்டுண்டு மாண்டான் என்று அனுமன் கூறினான். அது கேட்ட சம்பாபதி இன்பக் கண்ணீர் சிந்தினான். இராம கைங்கரியமாக என் தம்பி இறந்துபட்டான். அது மிக நன்று. அவன் இறந்தானென்பது பொய்; இறவாப் புகழ் பெற்று அவன் என்றும் இருக்கிறான் என்பதுதான் மெய். தருமத்தின் காவலனாகிய ராமபிரானுக்காக உயிர் துறத்தல் இறப்பன்று; உண்மையில் அது பெறுதற்கரிய பெரும்பேறாகிய வீடுபேறேயாகும் என்று கூறித் தம்பிக்குச் செய்யவேண்டிய ஈமக்கடன்களைச்செய்து முடித்தான்.

பின்னர் சம்பாபதியின் விருப்பப்படி வானர வீரர்கள் ராம நாமத்தைச் சொல்லுகின்றனர். ராம நாம மகிமையினால் சம்பாபதி இழந்த தன் சிறகுகள் இரண்டும் மீண்டும் முளைக்கப்பெறுகிறான். அது கண்ட வானர வீரர்கள் பெருவியப்புறுகின்றனர். சம்பாபதி வானரர்களை நோக்கி, இராவணன் சீதையைக் கவர்ந்து சென்றதை நான் நேரில் பார்த்தேன். அவள் இலங்கையில் சிறை வைக்கப்பட்டிருக்கின்றாள்.

'பாகு ஒன்று குதலையாளைப் பாதக
அரக்கன் பற்றிப்
போகின்ற பொழுது கண்டேன்; புக்கனன்
இலங்கை; புக்கு,
வேகின்ற உள்ளத்தாளை வெஞ் சிறையகத்து
வைத்தான்;
ஏகுமின் காண்பீர்; ஆங்கே இருந்தனள்
இறைவி, இன்னும்.'

"இராவணன் கொடும்பாவி. அவன் காவலுக்குட்பட்ட இலங்கையினுள் நீங்கள் செல்ல முடியாது. கொடிய பாசக்கயிற்றைக் கையில் ஏந்திய காலனும் அங்குச் செல்ல அஞ்சுவான். உங்களுள் வல்லமையுள்ள ஒருவன் மட்டும் இலங்கைக்கு மாறுவேடத்தில் சென்று சீதையைக் கண்டு வருக. அங்ஙனம் போகமுடியாவிடில் ராமனிடம் சென்று சீதை இலங்கையில்

இருக்கும் செய்தியை நான் சொன்னதாகச் சொல்லுங்கள்'' என்று கூறி வான்வழியாய்ச் சம்பாபதி பறந்து சென்றான்.

பின்னர் வானரவீரர்கள் தம்முள் கடல்கடக்க வல்லார் யார் என யோசித்தனர். நீலன் போன்றோர் தங்களால் கடல் கடக்க முடியாதென்று திட்டவட்டமாகக் கூறிவிட்டனர். அங்கதன், 'தான் கடல் கடந்து இலங்கை சென்று விடுவேன்; ஆனால் மீண்டும் திரும்பி வரும் வல்லமை எனக்கில்லை' என்று கூறிவிட்டான். சாம்பவான், திருமால் திருவிக்ரமனாகி ஈரடியால் மூவுலகளந்த காலத்தில், அப்பெருமானது வெற்றிச் செய்தியைப் பறைசாற்றிப் பூமியைச் சுற்றிவருகையில் மேருமலை தாக்கிக் கால் ஊனமாகிவிட்டது. அதனால், தற்சமயம் கடல் கடந்து இலங்கைக்குச் சென்று சீதையைக் கண்டுவருதல் எனக்கு இயலாதகாரியம். ஆனால் அனுமன் ஒருவனே எல்லாக்காரியங்களையும் செய்து முடிக்கவல்லவன் என்று அங்கதனிடம் கூறுகிறான்.

பின்னர் சாம்பவான் அனுமனைநோக்கி: ''பிரம்மதேவன் மடிந்தாலும்அழியாத வரமுடையவன் நீ; நுண்ணிய நூல்பல கற்றபேரறிஞன் நீ; கற்றதைப் பிறர் அறிய எடுத்துரைக்கும் சொல்திறன் உடையவன் நீ; காலனும் அஞ்சத்தக்க கடுங்கோபம் கொள்ளவல்லவன் நீ; ஆலகாலவிடம் உண்ட நீலகண்டன் போலக் கொடும் போர் புரியவல்ல பேராற்றல் படைத்தவன் நீ; பஞ்சபூதங்களாலும் வதைக்கப்படாத திறனுடையவன் நீ; தெய்வப்படைகள் பலவற்றாலும் சிதைக்கப்படாத வரம் பெற்றவன் நீ; உன்னை ஒப்பார் உலகில் வேறு எவருமிலர்; உனக்கு உவமை நீயேயன்றி வேறு யாருமிலர்; வெல்ல முடியாத வாலியை வெல்லுதற்கு வழிவகுத்தவன் நீ; மூவுலகத்தோர் எதிர்த்து நின்று பொருதாலும் தளராத தோள் வலிவுடையவன் நீ; நீதிநெறியில் நிலைத்து நிற்பவன் நீ; மகளிர் இன்பத்தை மனதாலும் நினையாது வளர்ந்தவன் நீ; அடங்கி இருக்கவேண்டிய சமயத்தில் அடங்கியிருக்கவும்; போர் வந்தால் ஆண் சிங்கம் போன்று போர் புரியவும் வல்லவன் நீ. எடுத்துக்கொண்ட காரியத்தைச் செவ்வனே முடிக்க வல்ல திறம் கொண்டவன் நீ ஒருவன்தான்'' என்று கூறி ''ஏகுமின் நீரே, எம் உயிர் நல்கி இசை கொள்ளீர்'' என்று சொல்லிமுடித்தான்.

சாம்பவான்கூறியதைக் கேட்ட அனுமனுக்கு மனத்தகத்து எல்லையற்ற பேராற்றல் பெருகுகின்றது. எதையும் தன்னால் சாதிக்க இயலும் என்ற தன்னம்பிக்கை மேலோங்குகிறது. ஆனந்தத்தினால் அகமும் முகமும் ஒளிவீசி மலர்கின்றன. உள்ளம் பூரித்து உற்சாகம் மேலிட்டுப் பேசுகிறான். என்னால் எதையும் சாதிக்க முடியும் என்கிறான். இலங்கையை வேரோடு பெயர்த்தெடுத்து இவ்விடத்திற்குக் கொண்டுவர வேண்டுமா? அரக்கரை அடியோடு அழித்துச் சீதாதேவியை இவ்விடம் கொண்டுவந்து சேர்க்கட்டுமா? நீங்கள் சொல்லுங்கள். இப்பொழுதே நீங்கள் சொல்லுகிறபடி செய்து முடிப்பேன். இதைவிரைவில் கண்கூடாகக் காண்பீர்கள்; கண்கலங்காதீர்.

''இலங்கையை இடந்து வேரோடு இவ்வயின்தருக [என்றாலும்,
விலங்கினர்தம்மை எல்லாம்வேரொடும் விளியநூறி,
பொலங்குழை மயிலைக்கொண்டு போது'' எனப் [புகன்றிட்டாலும்,
கலங்கலிர்! உரைத்த மாற்றம் முடிக்குவல் கடிது; [காண்பீர்!

என்று உற்சாகத்துடன் கூறினான்.

கடல்கடந்து சென்று சீதையைக் காண வேண்டும் என்ற பெருவேட்கை அனுமனிடத்து மேலும் மேலும் வளர்ந்தோங்குகிறது. சீதையைத் தேடிவரும்படி ராமன் தனக்கிட்ட கட்டளையினையும், தன்னம்பிக்கையினையும் இரு பெருஞ் சிறகுகளாகக்கொண்டு கருடனைப் போன்று பறந்து கடல்கடந்து செல்ல அவாவுகிறான். வானரர்களை நோக்கி: ''வானரர்காள்! நான் ஒரே தாவில் கடல்கடந்து செல்லுவதைக் காணுங்கள். நான் சென்று இனிது மீளும் வரை இங்கேயே தங்கியிருங்கள்'' என்று கூறி மகேந்திரமலையின் உச்சியை அடைந்தான்.

வானரர்கள் எல்லாரும் அவனை வாழ்த்தினர்; தேவர்கள் பூமழை பொழிந்தனர். இதற்கிடையில் ஈரடியால் மூவுலகளந்த நெடுமாலைப் போன்று அனுமன் வானுற வளர்ந்து வாரிதி கடத்தற்கு நெடிது நிமிர்ந்து நின்றான். ராம கைங்கரியம் செய்வதில் மட்டற்ற மகிழ்ச்சியுடன் கடல் கடக்க ஆயத்தமானான்.

# ஸத் ஸம்பாஷணை

கேள்வி: (180) *ஹிந்துக்கள் கோவிலில் வழிபாடு செய்யும்பொழுது பால், தயிர், தேன் ஆகிய உணவுப்பொருள்களை அபிஷேகத்திற்குப் பயன்படுத்துகிறார்கள், இச்செயல் உணவுப்பொருள்களை விரயம் பண்ணுவது ஆகாதா?*

கடவுள் வழிபாட்டில் ஞானகாண்டம், கர்ம காண்டம் என இரண்டு பகுதிகள் இருக்கின்றன. ஞானகாண்ட முறைப்படி வழிபாடு செய்கிறவர்களுக்கு விக்ரஹத்தின் மூலம் அபிஷேகம் ஆராதனை ஆகிய கிரியைகளுக்கு அவசியமில்லை. ஆனால் ஞானகாண்ட முறையைக் கையாளுதற்கான பரிபக்குவம் அடைந்திருப்பவர்கள் மிகச் சிலரே. மக்களில் பெரும்பான்மையோருக்குக் கர்மகாண்டமுறை முற்றிலும் அவசியமானது. அதைப் பக்தி பூர்வமாகக் கையாளுவதின் வாயிலாகப் பாமரர்களுக்குப் படிப்படியாகப் பக்தியும் ஞானமும் ஓங்குகின்றன. கோயிலில் பரதத்துவத்துக்குச் சின்னமாக விக்ரஹம் ஒன்றை அமைத்துக் கொண்டு அதன்கண் பரம்பொருள்எழுந்தருள வேண்டுமென்று கர்மகாண்ட முறைப்படி வேண்டிக்கொள்ளப்படுகிறது. அந்த விக்ரஹத்தில் இறைவனுடைய சாந்நித்தியம் சிறப்பாக வீற்றிருக்கிறது என்னும் நம்பிக்கை மக்கள் உள்ளத்தில் ஆழ்ந்து ஊட்டப்பட்டிருக்கிறது. அது பாராட்டத்தக்க நம்பிக்கை, தத்துவத்துக்கு ஒத்தது. ஆயிரக்கணக்கான பேர் அன்புடனும் விசுவாசத்துடனும் மூர்த்தியின்கண் எழுந்தருளியிருக்கும் தெய்வத்துக்கு வணக்கம் செலுத்துகின்றனர்.

சத்து நிறைந்த நல்ல உணவுப் பொருள்களை அபிஷேகத்திற்குப் பயன்படுத்துவது ஐதிகமாக வந்துள்ள வழிபாட்டு முறைபாகும். இம்முறையில் பொருள் நஷ்டத்துக்கு இடமில்லை. பால் அபிஷேகம் பண்ணுகிறபொழுது மற்றொரு பாத்திரத்தில் அது ஈசுவரப் பிரசாதமாக எடுத்துக்கொள்ளப்படுகிறது. அதே விதத்தில் பஞ்சாமிர்தம், தேன், தயிர் ஆகியவைகள் பிரசாதமாக எடுத்துக்கொள்ளப்படுகின்றன. வழிபாட்டுக்குக் குழுமியுள்ள மக்களுக்கிடையில் சுவை நிறைந்த இப்பண்டங்கள் பிரசாதமாக வழங்கப்படுகின்றன. தனி மனிதர்களுக்குரிய விலையுயர்ந்த பொருள்கள் ஈசுவரப் பிரசாதமாகப் பொது மக்களுக்கு உரியனவாக்கப்படுகின்றன. இங்ஙனம் தனி உடைமை தெய்வத்தின் பெயரால் பொது உடைமை ஆக்கப்படுகிறது. அடுத்தபடியாக மனிதனிடத்திருந்து மனிதன் நேரே பொருளை ஏற்றுக்கொள்ளுகிறபொழுது கொடையாளன் ஏற்பாளன் என்னும் வேண்டப்படாதபாகுபாடுகள் வருகின்றன. நான் கொடையாளி என்கின்ற எண்ணம் கொடுப்பவனிடத்து வரலாகாது. இலவசமாக ஒருவரிடமிருந்து பொருளை நான் ஏற்றுக்கொண்டேன் என்ற இகழ்ச்சி இன்னொருவனுக்கு வரலாகாது. தெய்வத்துக்கு அபிஷேகம் செய்து ஈசுவரப்பிரசாதமாக வழங்குகின்ற இடத்துக் கொடையாளி என்கின்ற எண்ணமும் இலவசமாக ஏற்றுக்கொண்டேன் என்ற எண்ணமும் தவிர்க்கப்படுகின்றன. தெய்வ பக்தியே பொருளை வழங்கியவனிடத்தும், பொருளை ஏற்றவனிடத்தும் ஓங்குகிறது. ஆதலால் ஹிந்துக்களாகிய நாம் ஆலய வழிபாட்டில் கையாண்டுவருகிற மேலாம் உணவுப் பொருள்களைக்கொண்டு செய்கிற அபிஷேகத்தைப் புறக்கணிக்கலாகாது. அதற்கு உற்சாகம் ஊட்டவேண்டும். எவ்விதத்திலும் பொருள்களுக்குச் சேதம் ஏற்படாது அபிஷேகத்தை நடாத்துவதில் கண்ணும் கருத்துமாயிருக்கவேண்டும். இம்முறை நம் ஆன்றோர்கள் வகுத்துவைத்துள்ள மேலாம் செயலாகிறது. இதில் பொருளாதாரப் பங்கீடும் கடவுள் பக்தியை வளர்க்கும் முறையும் சேர்ந்தே அமைந்திருக்கின்றன.

கேள்வி: (181) *சிதம்பரத்தில் கோவிந்தராஜன் சயனித்திருக்க நடராஜன் நடனம் புரிவதேன்?*

பரதத்துவம் முழுவதும் சிதம்பரத்தில் அமைந்துள்ள கோயிலில் வடிவத்தின் மூலமாக விளக்கப்படுகிறது. கிரஹிக்க முடியாத பாரமார்த்திகத் தத்துவங்களுக்கு விளங்கக்கூடிய வடிவங்களைக் கொடுத்து அந்த வடிவங்களின் வாயிலாகத் தத்துவத்தை விளக்கினால் அது மந்த அதிகாரிக்கும் நன்கு விளங்குகிறது.

அறிந்து கொள்ளுவதற்கு அரிதாயிருக்கிற நுண்ணிய கோட்பாடுகளை யாரும் அறியும்படி அதற்கேற்ற உபாயத்தைக் கையாண்டு விளக்குவது இந்து மதத்தின் தனிச்சிறப்பு ஆகும்.

பரவஸ்துவானது அசைவு அற்றதாகவும் அசைவு உற்றதாகவும் ஏக காலத்தில் இருக்கிறது. இக்கோட்பாடு 'சயானோ யாதி ஸர்வத: சயனித்துக்கொண்டும் அதே வேளையில் எங்கும் நடமாடிக்கொண்டும் பரவஸ்து இருக்கிறது என்னும் கோட்பாடு உபநிஷதத்தில் வந்துள்ளது. கடல் ஏக காலத்தில் மேற்பரப்பில் அலை வீசிக்கொண்டிருக்கிறது. கீழ்ப்பகுதி அசையாது இருந்தது இருந்தபடி இருக்கிறது. பரவஸ்துவின் பாங்கும் இத்தகையதே. இக்கோட்பாட்டைக் கோவிந்தராஜன் சயனித்துக் கொண்டிருக்கிறான் என்றும், நடராஜன் அண்டங்கள் அனைத்தையும் தன் நடனத்தின் வாயிலாக இயக்குவிக்கிறான் என்றும் இயம்பப்படுகிறது. சமய வாதிகள் கருதுகிற பிரகாரம் கோவிந்தராஜனும், நடராஜனும் ஒன்றினின்று ஒன்று மாறுபட்டிருக்கிற இரண்டு தெய்வங்கள் அல்லர். வஸ்து ஒன்று. அதில் இயக்கமும், இயக்கமின்மையும் சேர்ந்து அமைந்திருக்கின்றன என்பது தத்துவம். இக்கோட்பாட்டுக்கு விளக்கமாகச் சிதம்பரத்தில் கோவிந்தராஜனுடைய சந்நிதியும் நடராஜனுடைய சந்நிதியும் இணைத்து அமைக்கப்பெற்றிருக்கின்றன.

கேள்வி: (182)

*நந்தவனத்தில் ஓர் ஆண்டி அவன்*
*நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டிக்*
*கொண்டு வந்தான் ஒரு தோண்டி அதைக்*
*கூத்தாடிக் கூத்தாடிப் போட்டு*
*உடைத்தாண்டி*

*இந்தப் பாடலின் விளக்கம் யாது?*

நந்தவனம் என்னும் சொல் இந்தப் பிரபஞ்சத்தைக் குறிக்கிறது. பிரளயத்துக்குப் பிறகு வருகிற பிரளயங்களில் அது அழிந்துபட்டுப் போகாதிருப்பதால் அதற்கு நந்தவனம் என்னும் பெயர் வந்துள்ளது. பரிணாமத்தின் பொருட்டும், பயற்சியின் பொருட்டும் ஜீவாத்மாக்கள் இந்த நந்தவனத்துக்கு வந்து கொண்டேயிருக்கிறார்கள். அப்படி வருகிறவர்கள் வந்த வரவை மறந்து விடுகிறார்கள். இது அவர்களுக்குச் சாஸ்வதமான இருப்பிடம் என்று மனக்கோட்டை கட்டுகின்றனர். உண்மையில் ஜீவர்கள் இடம் மாறிப் போய்க் கொண்டேயிருக்கின்றனர். அவர்களுக்கு ஆறிலும் சாவு, நூறிலும் சாவு. பிரபஞ்ச வாழ்வு நீர்க்குமிழி போன்று நிலையற்றது என்பதை அவர்கள் நினைவில் கொள்வதில்லை. ஆயினும் முன் எச்சரிக்கை இன்றியே இவ்வுலகினின்று வெளியேற்றப் படுகின்றனர். ஆதலால் ஜீவன் ஒருவன் ஆண்டி என ஈண்டு இயம்பப்படுகிறான். ஆண்டிக்குச் சொந்த இடம் கிடையாது. எங்கெங்கேயோ இடம் மாறி அவன் போய்க்கொண்டிருக்கிறான். பிரம்மதேவன் என்னும் குயவன் அந்தந்த ஜீவனுடைய கர்மத்துக்கு ஏற்ப உடல் ஒன்றை வனைந்து கொடுக்கின்றான். விந்துவினின்று மானுட உடல் வடிவெடுப்பதற்குப் பத்து மாதங்கள் ஆகின்றன. அக்கோட்பாடு நாலு ஆறு மாதமாக வேண்டி என்னும் வரியில் அடங்கியிருக்கிறது. மட்பாண்டங்கள் பலவற்றுள் தோண்டி என்பது ஒன்று. அது கிணற்றினின்று நீர் சேந்துவதற்குப் பயன்படுகிறது. மட்பாண்டமாதலால் கிணற்றினின்று நீரைத் தாங்கிக்கொண்டு மேலே இழுக்கப்படுகிற பொழுதே அது உடைந்து போவதுண்டு. மானுட சரீரம் அதுபோன்று நிலையற்றது என்னும் கருத்து அதில் அடங்கியிருக்கிறது. பிரபஞ்சம் என்பது ஒரு நாடகமேடை. இதனுள் புதிய புதிய ஜீவர்கள் வந்துகொண்டேயிருக்கிறார்கள். வயது சென்ற ஜீவர்கள் இதை விட்டு வெளியேறிக்கொண்டேயிருக்கின்றனர். இங்கிருக்கும்பொழுது அவர்கள் வாழுகிற வாழ்வு கூத்தாட்டம் எனக் கூறப்படுகிறது. கூத்தாடிகள் வித விதமான பாங்குடையவர்களாக இருக்கிறார்கள். பேரும் புகழுக்காகப் படாதபாடுபட்டு அலைந்து திரிவது மட்டும் எல்லாருடைய பான்மை ஆகிறது. இப்படியெல்லாம் வாழ்ந்து வருகிறவர்கள் திடீரென்று மரணத்துக்கு ஆளாகி மறைந்து போகின்றனர். வாழ்க்கையின் மேலான நோக்கத்தை அறிந்து கொள்ளாமையே அதற்குக் காரணமாகும். இந்த ஆழ்ந்த கருத்துக்களே இப்பாட்டின் உட்கருத்து ஆகும்.

# சங்க இலக்கியங்களில் சமயக் கருத்துக்கள்

(வித்துவான் ஆதி. பாலசுந்தரன் M.A.)

**ஆன்மாவின் மூன்று நிலைகள்**

ஆன்மா மூன்று நிலைகளைப் பெறுகின்றது. இந்த நிலைகள் அவஸ்தைகள் அல்லது அவத்தைகள் என்று சொல்லப்படும். கேவல அவத்தை, சகல அவத்தை, சுத்த அவத்தை ஆகியவை அம்மூன்று அவத்தைகள் ஆகும். கேவலம் என்பதற்கு இந்த இடத்தில் பொருள் ''மாத்திரம்'' என்பது. ஆணவ மலத்துடன் மாத்திரம் ஆன்மா சேர்ந்திருப்பது கேவலாவத்தை.

கன்மமலம், மாயாமலம் ஆகிய இரண்டு மலங்களுடன் ஆன்மா சேர்ந்திருப்பது சகலாவத்தை எனப்படும்.

கேவலாவத்தை ஆன்மாவுக்கு இருள்நிலை. சகலாவத்தை ஆன்மாவுக்கு அமைந்துள்ள அறிவை மயங்க வைத்து அரை குறையாக்கும். எனவே, சகலாவத்தை மயக்க நிலையாகிய மருள்நிலை.

இந்த இரண்டு நிலைகளும் ஆன்மாவைவிட்டு நீங்கி, பூரண அறிவைப் பெறுகின்ற நிலை சுத்தாவத்தை. இந்தச் சுத்தாவத்தைநிலை அடைய இறைவனுடைய அருள்நிலை வேண்டும்.

**ஆன்மாவின் இலட்சியம்**

ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்றையும் கடந்து—இம்மலங்களிலிருந்து ஆன்மா தன்னை விடுவித்து—இறைவனோடு இரண்டறக் கலத்தலே ஆன்மாவின் இலட்சியம். இதையே முக்தியடைதல் என்று கூறுகிறார்கள்.

**முக்தி என்றால் என்ன ?**

''ஒன்றுமே இல்லாத நிலைதான் முக்தி''; ''துன்பம் சிறிதுகூட இல்லாத நிலையே முக்தி''; ''ஆன்மா கல்லைப் போல, எவ்வித உணர்வும் இன்றிக்கிடக்கின்ற நிலையே முக்தி''; ''ஆன்மா தன்னுடைய தனி இயல்பை இழக்கும் நிலையே முக்தி'' என்று ஒவ்வொரு சாரார் ஒவ்வொரு விதமாக முக்தியைப் பற்றிச் சொல்லுகின்றனர்.

ஜீவாத்மா பரமாத்மாவாகவே ஆகுவதும் ஒரு முக்திநிலை. ஆன்மா இறைவனோடு இரண்டறக் கலப்பதும் ஒரு முக்திநிலை. தாள் என்பது ஒரு சொல், தலை என்பது ஒரு சொல். இந்த இரண்டு சொற்களும் இணையும் போது ''தாடலை'' என்று ஆகும். தாடலை என்ற சொல் ஒரு விதத்தில் ஒரு சொல் ஆகும். இன்னொரு விதத்தில் இரண்டு சொற்கள் ஆகும். இதே போன்று, ஆன்மா இறைவனுடன் இரண்டறக் கலப்பதாகும்.

இவ்வுண்மைகளை யெல்லாம் நம் முன்னோர்கள் தங்களுடைய மனம் போனபடி கூறி விடவில்லை. சுருதி, யுக்தி, அனுபவம் ஆகிய மூன்று பிரமாணங்களை அடிப்படையாகக் கொண்டு கூறியுள்ளனர்.

**உடம்பும் உயிரும்**

உடம்பு, உடல், குடம்பை, கூடு, மெய், யாக்கை, முடை, கட்டை என்பன உடம்பிற்கு வழங்கப்படும் பெயர்கள். உயிருடன் சேர்ந்து இயங்குவது உடல் அல்லது உடம்பு. குஞ்சு பொரித்தபின் தொடர்பு நீங்கும் முட்டைக்கூடு போல, உயிரை விட்டு நீங்குவது குடம்பை அல்லது கூடு. உயிரை மேலாகப் பொதிந்திருப்பது மெய், தோள், நரம்பு, எலும்பு, தசை, இரத்தம் முதலான ஏழுவகைத் தாதுக்களால் யாக்கப்பெற்றிருப்பது அல்லது முடையப்பட்டிருப்பது யாக்கை அல்லது முடை. உயிர் நீங்கிய பிறகு கட்டை போலக் கிடந்து எரிவது அல்லது மண்ணுடன் மண்ணாய்ப் போவது கட்டை.

உடம்புக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு என்ன ?

''குடம்பை தனித்தொழியப் புள்பறந் தற்றே
உடம்பொடு உயிரிடை நட்பு''

என்பது வள்ளுவர் வாக்கு. கூடு தனித்து இருக்க, அக்கூட்டை விட்டுப் பறவை பிரிந்து செல்லுவதைப் போல, இவ்வுடம்பு தனியே கிடக்க, உயிர் பிரிந்து சென்று விடுகிறது. இதுதான் உடம்புக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு.

**சங்க இலக்கியங்களில் கடவுள் பற்றிய செய்திகள்**

சங்க இலக்கிய நூல்களில் கடவுளைப் பற்றிய பல செய்திகள் சொல்லப்படுகின்றன. கடவுள் என்ற சொல்லுக்கு மனம், மொழி,

மெய் [மனம், வாக்கு, காயம்] ஆகிய மூன்றையும் கடந்தவன் என்பது பொருள். அதாவது, கடவுள் எப்படி இருப்பார் என்பதை மனத்தால் நினைத்துப் பார்க்க முடியாது. மொழியால்—வார்த்தைகளால் – விவரித்துச்சொல்ல இயலாது. மெய்யால் — உடம்பால், உடல் உறுப்புகளால் தொட்டுப் பார்க்க இயலாது. இது மட்டும் தானு? இன்னும் எல்லாப் பொருள்களையும் கடந்து–அவற்றிற்கு எல்லாம் அப்பாற்பட்டு விளங்குபவன் இறைவன் ஆகிய கடவுள். கடவுள் முழுமுதல் பொருள். கடவுளுக்குமேல் முழுப் பொருளோ, முதல் பொருளோ இல்லை.

கடவுள் என்னும் சொல்லைக் ''கடந்த உள்'' எனப் பொருள் கொண்டு, எல்லாவற்றையும் கடந்து — துறந்து — நிற்கின்ற உள்ளத்தில் நிறைந்து நிற்பது என்றும் சிலர் கூறுவார்கள்.

''கடவு உள்'' என்று பிரித்து, எல்லா உயிர்களையும், எல்லா உள்ளங்களையும் கடவுகின்ற—செலுத்துகின்ற—ஒரு பொருள் என்றும் சிலர் கூறுவார்கள்.

சங்க இலக்கியங்களில் இரண்டு விதமான கடவுள் வழிபாட்டு முறைகள் இருந்தன என்பதை நாம் அறியலாம். ஒன்று, பண்டைய தமிழர்கள் வழிபாடு செய்த, தனிப்பட்ட வழிபாட்டு முறை; மற்றென்று வைதீக நெறியோடு சார்ந்த வழிபாட்டு முறை.

### தமிழர் வழிபாட்டின் தனித்த முறை

இயற்கையோடு இணைந்த வழிபாட்டு முறையே தமிழர் வழிபாட்டு முறையாக இருந்து வந்தது. இயற்கை கடவுளின் உடல். இயற்கையாகிய உடல் முழுவதும் கடவுள் நிறைந்து நின்று அதனை இயக்குகின்றுன்; இயற்கைக்கு அப்பாற்பட்டும் இறைவன் திகழ்கிறுன் என நம்பினர்.

மரம் இயற்கைப் பொருள். மரத்தில் தெய்வம் உறைவதாகக் கருதி வழிபட்டனர். இவ் வழிபாட்டு முறை மாறி, காலப்போக்கில், மரத்தின் அடியில் கடவுளுக்கு உருவச்சிலை அமைத்து வழிபடலாயினர். காலப்போக்கில், அந்தக் கடவுள் சிலையைச் சுற்றிலும் மரத்தால் கோயில் அமைத்தனர்; செங்கல்லால் கோயில் அமைத்தனர்; கற்களைக்கொண்டு கோயில் கட்டினர். கோயில் அமைத்த பிறகு, ஆதியில் அவ்விடத்தில் இருந்த மரம் பாதுகாக்கப் பட்டு ''ஸ்தல விருட்சமாக'' அமைந்துவிட்டது.

ஒலி, ஒளி ஆகிய இரண்டு இயற்கைப் பொருள்களையும் கடவுளின் அடையாளமாகத் தமிழர் வழிபட்டு வந்தனர். ஒலியைக் கேட்கும் ஒலி, கேளா ஒலி என இரண்டு பகுதிகளாகப் பிரித்து அறிவியல் அறிஞர்கள் கூறுவார்கள். கேட்கும் ஒலியை நாம் அறிவோம். கேளா ஒலியை எண்ணம் என்பார்கள். கேளா ஒலியாகிய எண்ணத்தின் மூலம் நன்கு சிந்தனை செய்தனர். யார் வழிபாடு செய்கிருரோ அவர் மூலம் இறைவன் வெளிப்படுவான் என்ற நம்பிக்கை அவர்களுக்கு இருந்தது.

### வெறியாட்டு

'' வெறியாட்டு '' என்பது பழந்தமிழர்களின் தனித்த வழிபாடாக இருந்து வந்தது. இறைவன் தன்மூலம் வெளிப்படுவான் என்ற நம்பிக்கையில் வெறியாட்டு நடத்தினர்.

வெறியாட்டு என்ருல் என்ன? ஒருவன், வேலைக் கையிலே வைத்துக்கொண்டு, முருகனைப் போற்றி அழைத்துக்கொண்டே ஆடுவான். வேலைக் கையில் வைத்துக்கொண்டு ஆடியதால், அவனுக்கு வேலன் என்னும் பெயர் அமைந்தது. ''முருகப்பெருமான்தான் நமக்குத் துன்பங்களைத் தருகின்ருன்; துன்பங்களைத் தந்த முருகனே அவற்றை நீக்க வேண்டும்'' என்று வேண்டி வெறியாட்டு ஆடுவான்.

''வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
வெறியாட்டு அயர்ந்த காந்தன்''—''வேலன் வெறியாட்டைச் சிறப்பித்துக் கூறும் காந்தன் என்னும் துறை ''—என்று தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் கூறப்படுகிறது.

''வேலன் புனைந்த வெறிஅயர் களந்தோறும்
செந்நெல் வான்பொரி சிதறி அன்ன''
—''வேலனின் வெறியாட்டு நடைபெறுகின்ற இடம்தோறும், செந்நெல்லின் வெள்ளைப் பொரி சிதறிக் கிடக்கும்'' என்று குறுந்தொகை [53] நூலில், இந்த வெறியாட்டைப் பற்றிச் சொல்லப்படுகிறது.

''கறிவளர் சிலம்பின் கடவுள் பேணி
அறியா வேலன் வெறிஎனக் கூறும்''
—''மிளகுக் கொடிகள் மிகுதியும் வளர்கின்ற மலையில் உறையும் தெய்வமாகிய முருகனை நினைத்து, தலைவியின் நோய் இன்னது என்று

அறியாத வேலன் ஆடுகின்ற வெறி'' என்று ஐங்குறுநூறு [243] கூறுகிறது.

''அருங்கடி வேலன் முருகொடு வளைஇ
அரிக்கூடி இன்னியம் கறங்க நேர்நிறுத்துக்
கார்மலர்க் குறிஞ்சி சூடிக் கடம்பின்
சீர்மிகு நெடுவேள் பேணித் தழூஉப்பிணையூஉ
மன்று தொறும் நின்ற குரவை''

—''பார்க்கின்றவர்களுக்கெல்லாம் பயம் ஏற்படும் முறையில் வேலன் என்பவன் வெறியாடுகின்றான்; துன்பங்கள் எல்லாம் முருகனால்தான் வந்தன என்கிறான்; தன் பேச்சால் கேட்பவர்களைத் தன் வசப்படுத்துகின்றான். இனிய வாத்தியங்கள் ஒலிக்கின்றன. குறிஞ்சி மலரைச் சூடி, கடம்பமலர்மாலை அணிந்த முருகப் பெருமானைத் தனது உடம்பிலே வருமாறு நிறுத்தி வழிபடுகின்றான். அப்போது, மகளிர் கைகோத்து நின்று குரவைக் கூத்து ஆடுகின்றனர்'' என்று மதுரைக் காஞ்சி என்ற சங்க இலக்கிய நூலும் [வரி: 613-615] வெறியாட்டுப் பற்றிக் கூறுகின்றது.

பழந்தமிழர் வழிபாட்டு முறைகளுள் ஒன்றான வெறியாட்டைப் பற்றிக் கூறுகின்ற சங்க இலக்கியங்களுள் காணப்படும் சில சான்றுகள் இவை.

நடுகல் வழிபாட்டு முறை

போர்க்களத்தில் வீரமரணம் எய்திய வீரர்கள் நினைவாக நினைவுக் கற்கள் நிறுத்தப்பட்டன. இக்கற்களுக்கு அருகில், கேடயங்கள், ஈட்டிகள் ஆகியவை வைக்கப்பட்டன. இந்நடுகற்களைத் தெய்வங்களாக எண்ணி வணங்கி வந்தார்கள்.

இவ்வாறு நடுகல்லை நடுவதற்கு ஏற்ற கல்லைத் தேர்ந்தெடுப்பார்கள்; அக்கல்லில் வீரனின் உருவம் செதுக்கப்படும். பிறகு, அக்கல்லுக்கு நல்ல நிமித்தம் பார்ப்பார்கள். அக்கல்லை நீராட்டுவார்கள். தகுந்த இடத்தில் நடுவார்கள். கோயில் கட்டி விழாநடத்தி நடுகல்லை வணங்குவார்கள்.

''தாம் வசித்த கற்களை விட்டுத் தெய்வங்கள் நீங்கி விட்டமையால், அம்பலங்கள் பாழடைந்து கிடக்கின்றன'' என்று புறநானூறு [52] கூறுகிறது.

''தெய்வம் நீங்கிச் சென்று விட்ட தூண்களை உடைய மண்டபங்கள், புதர்கள் மண்டிப் பாழடைந்து விட்டன'' என்று அகநானூறு [307] கூறுகிறது.

இத்தகைய நடுகற்களே பிற்காலத்தில், மதுரை வீரன், கருப்பன், சுடலைமாடன், இருளன், ஐயனார் என்ற சிறு தெய்வங்களாகப் போற்றப்பட்டிருக்கலாம்.

தமிழர் வழிபட்ட தெய்வங்கள்

தமிழர்கள் தங்கள் நாட்டின் இயற்கைக்கு ஏற்றவாறு தெய்வங்களை அமைத்து வழிபட்டு வந்தனர். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என நிலங்களை ஐந்து வகையாகப் பாகுபாடு செய்திருந்தனர். மலையும், மலையைச் சார்ந்த இடமும் குறிஞ்சி நிலம். காடும், காட்டைச் சேர்ந்த நிலமும் முல்லை நிலம். வயலும், வயலைச் சார்ந்த இடமும் மருத நிலம். கடலும், கடலைச் சார்ந்த இடமும் நெய்தல் நிலம். ஒன்றுக்கும் பயன்படாத வெப்பம் மிகுந்த நிலம் பாலை நிலம்.

இந்த ஐவகை நிலங்களுக்கும் தமிழர்கள் தெய்வங்களை வரையறை செய்திருந்தனர். அதாவது இன்ன நிலத்திற்கு இன்ன தெய்வம் எனக் கூறினர்கள். குறிஞ்சி நிலக் கடவுள் முருகன். முல்லை நிலக்கடவுள் திருமால். மருத நிலக்கடவுள் இந்திரன். நெய்தல் நிலக் கடவுள் வருணன். பாலை நிலக்கடவுள் கொற்றவை என்கின்ற காளி.

''மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்'' —

''மாயோன் என்ற திருமால் உறைகின்ற காடு, காட்டைச் சார்ந்த இடம் முல்லை நிலம். சேயோன் என்ற முருகன் உறைகின்ற மலை, மலைசார்ந்த இடம் குறிஞ்சி நிலம். வேந்தன் என்ற இந்திரன் உறைகின்ற நீர்ச்செழிப்பு மிக்க வயலும், வயல் சார்ந்த இடமும் மருத நிலம். வருணன் உறைகின்ற கடலும், கடல் சார்ந்த இடமும் நெய்தல் நிலம்'' எனத்தொல்காப்பியம் [பொருள் அதிகாரம்-அகத்திணை-நூற்பா-5.] கூறுகிறது. கொற்றவை என்ற காளி இதில் சொல்லப்படவில்லை.

தொல்காப்பியர் இந்நூற்பாவில், வருணன் என்ற கடவுளுக்கு மட்டும் பெயரைச்சொல்லிக் குறிப்பிடுகிறார். மாயோன்-மாயச் செயல்

புரிபவன் என அக்கடவுளின் செயலேயும், பண்பையும்சுட்டிச் சொல்லுகின்றார். சேயோன்-செம்மை நிறம் உடையவன் எனப் பண்பையும், வேந்தன்-பாதுகாப்பைத் தருபவன் என இயல்பையும் சுட்டிக் காட்டுகின்றார்; இயற் பெயர்களைச் சொல்லவில்லை. இந்நூற்பாவுக்கு உரையாசிரியர்கள் உரை எழுதும்போது, மாயோன் திருமால், சேயோன் முருகன், வேந்தன் இந்திரன் எனப் பொருள் கூறியுள்ளனர்.

**வேத ஒப்புமை**

வேதங்களில், தெய்வப் பிரிவுகளை மூன்று வகையாகப் பாகுபாடு செய்துள்ளனர். ஆகாயத்துக்கு உரிய வருணன், மித்திரன் ஒரு பிரிவு. மண்ணுக்குரிய அக்கினி போன்றவை மற்ளுெரு பிரிவு. ஆகாயம், பூமி இரண்டுக்கும் இடைப்பட்ட வாயு மண்டலத்துக்குரியவை மூன்றும் பிரிவு.

வேதங்களில் சொல்லப்படுகின்ற இந்தத் தெய்வப் பாகுபாடுகளையும், தொல்காப்பியர் செய்துள்ள தெய்வப் பாகுபாடுகளையும் ஒப்பிட்டுப் பார்த்துக்கொள்ளலாம்.

**இறைவன் இயல்பு இயம்ப இயலாதது**

தண்ணீருக்குத் தனி உருவம் இல்லை. அதை வெவ்வேறு வடிவம் உடைய பாத்திரங்களில் ஊற்றினால், வெவ்வேறு வடிவில் உருவம் கொள்ளும். அதுபோல, தனக்கு என்று தனி வடிவம் இல்லாத இறைவன், அவரவர் நினைக்கின்ற விதத்தில், மனத்தில் உருவம் கொள்ளுவான் என்று, கடவுளின் பல்வேறு வடிவங்களுக்குப் பெரியவர்கள் விளக்கம் கூறுவார்கள்.

கடவுளின் உண்மை நிலை யாது என ஒருவராலும் அறுதியிட்டு முடிந்த முடிபாகக் கூற இயலாது. எதுவும் நிச்சயமற்ற தன்மையாகவே இருக்கிறது எனப் புதிய இயற்பியல் உண்மை [Uncertainity in Modern Physics] இயம்புகிறது. "தம்மை [கடவுளை] யாரும் அறிவார் இல்லை" என்கிறார் ஞானசம்பந்தர். "நற்பதத்தார்...சொற்பதத்தார் சொற்பதமும் கடந்து நின்ற சொலற்கு அரிய சூழலாய் இது உன் தன்மை" என்கிறார் நாவுக்கரசர். "உணர்ந்து உணர்ந்து இழிந்து அகன்று உணர்ந்து உருவியந்த இந்நிலைமை, உணர்ந்து உணர்ந்து உணரினும் இறைநிலை உணர்வு அரிது" என்கிறார் நம்மாழ்வார். "சொற்பதம் கடந்த தொல்லோன்"; "சித்தமும் செல்லாச் சேட்சியன்"; "மாற்ற மனம் கழிய நின்ற மறையோன்" என மணிவாசகர் கூறுகின்றார்.

"யார் அறிவார் எங்கள் அண்ணல் பெருமையை
யார் அறிவார் அந்த அகலமும் நீளமும்
பேர் அறியாத பெருஞ்சுடர் ஒன்று அதன்
வேர் அறியாமல் விளம்பு கின்றேனே"

என்கிறார் திருமூலர்.

"அன்றும் திருஉருவம் காணுதே ஆட்பட்டேன்
இன்றும் திருஉருவம் காண்கிலேன்—என்றும்தான்
எவ்வுருவோ நும்பிரான் என்பார்கட்கு
என்உரைக்கேன்
எவ்உருவோ நின்உருவம் எது?

—என்று இறைவனிடமே வினவுகின்றார் காரைக்கால் அம்மையார். "வாசித்துக் காண ஒணுது. (இயலாது) பூசித்துக்கூட ஒணுது; வாய்விட்டுப்பேச ஒணுது" என்கிறார் அருணகிரியார். "மனம் ஆதிக்கு எட்டாத பேரின்ப மயமாய்"; "சொல்லுக்கு அடங்காச் சுகப் பொருள்"; "சொல்லாய தொகுதி எலாம் கடந்து நின்றசொருபானந்தச்சுடர்" என்கிறார் தாயுமானவர்.

இறைவன் இன்ன வண்ணமாக இருக்கிறான் என்று யாராலும் கூற இயலாது என்பதைக் கூறவந்த அடியார்களின் அனுபவ மொழிகள் இவை ஆகும்.

**தெய்வம் ஒன்றே**

அவரவர் உணர்வுக்கும், உள் ஒளிக்கும் ஏற்ப இறைவனை எண்ணி வழிபட்டார்கள். "தேவுக் கொளல் பொருட்டே" [தொல்காப்பியம்] தேவு என்ற சொல்லை அடியாகக் [root] கொண்டு தேவன், தேவர், தேவி என்ற சொற்கள் தோன்றின. தேவு என்ற பகுதியில் இருந்துதான் தெய்வம் என்ற சொல்லும் தோன்றியது.

தெய்வம் என்பது கொள்ளுவதற்குரிய வடிவத்தை உடைய கடவுளைக் குறிக்கும். எங்கும் நிறைந்து விளங்கும் இறையை வடிவமாகக் காண விரும்பும்போது, விரும்புகின்றவர்கள் விரும்பும் வடிவத்துடன் காட்சியளிக்கும்போது அது தெய்வம் எனப்படும்.

"இருப்பது ஒரு தெய்வமே; அவ்வொரு தெய்வந்தான் பல்வேறு வடிவங்களில் காட்சியளிக்கிறது" என வேதம் கூறுகிறது.

# மலைநாட்டுப் புனித ஸ்தலயாத்திரை

(சுவாமி குஹானந்தர்)

"பார்க்குமிட மெங்கு மொரு நீக்கமற
நிறைகின்ற பரி பூரணானந்தமே"

என்பது தாயுமானவர் வாக்கு. பசுவின் பால் உடம்பு முழுதும் ரத்தமயமாகப் பரந்து இருப் பினும் பாலாக மாறுவது அதன் மடியில் நிகழ் வது போன்று எங்கும் வியாபித்து இருக்கும் இறைவன் மந்திர யந்திரத்துடன் கூடியதும் ஆன்றோர்கள் வழிபட்டதுமாகிய திருக்கோயில் களில் விசேஷமாக இருக்கிறார்.

"கோயில் இல்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம்" என நம் ஔவைப்பிராட்டியார் திருவாய் மலர்ந்ததை ஒட்டி, நம் தேசத்தில் அதிலும் குறிப்பாகத் தென்னாட்டில் கோயில் இல்லாத ஊரே இல்லை எனலாம். நம் இந்துக் கள் அத்திருக்கோவில்களில் தினமும் வழி பாடுகள் நடத்தி

"நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலு மெம்பிரானுடைய கோயில் புக்கு"

என்று பாடிய திருநாவுக்கரசர் திருவாக்குக் கிணங்க, இம்மையும், மறுமையும் பெற்று உய்வடைந்தனர். இவ்விதத் திருத்தலங்கள் தண்டமிழ் நாட்டில் ஏராளமாய் இருப்பது போல மலைநாடென்று சொல்லப்படும் கேரளா விலும் அமைந்து இருக்கின்றன.

"கேரளா" என்ற பிரதேசம் முன் திரு வாங்கூர், கொச்சி சமஸ்தானங்களும், மலபார் ஜில்லா என்ற தமிழ் நாட்டின் ஒருபகுதியும் சேர்ந்ததாகும். மொழிவாரி ராஜ்யங்கள் பிரி யும் போது முழுவதும் மலையாளம் பேசும் ஜனத்தொகையைக் கொண்டதால், கேரளா என்ற பெயருடன் ஸ்தாபிக்கப்பட்டது. இது மேற்குக் கடற்கரையோரமாகத் தெற்கே பாரசாலை முதல் காசர்கோடு முடிய உள்ள நீண்ட குறுகிய நிலப்பரப்பாகும். இதில் நாயர், ஈழவர், கிறிஸ்துவர், மாப்பிளா என்ற முஸ்லிம்கள் இருக்கின்றனர். மொழி ஒன்றா னாலும், பழக்கவழக்கங்களில் அவர்கள் மாறு பட்டவர்கள். ஆனால் கல்வி அறிவிலும், மதஅபி மானத்திலும், நடை, உடைகளிலும் தூய்மை உடையவர்கள். இதன் தலைநகராகிய திரு வனந்தபுரத்திற்குச் செல்லும் வழியில் கொளத் துப்புழை உள்ளது. மலைநாட்டு ஸ்தலங்களைத் தரிசிக்கச் செப்டம்பர் மாதம் 9 ஆம் தேதி பதினைந்து அன்பர்கள் ஒரு வேனிலும், ஐந்து தாய்மார்கள் ஒரு வாடகைக் காரிலும் புறப்பட் டோம். திருவனந்தபுரம் அன்பர்கள் இருவர் நீங்கலாக, மற்றெல்லாரும் 8—9—78 இரவே குற்றாலம் ஆஸ்ரமம் வந்தடைந்தனர்.

9—9—78 அதிகாலை நான்கு மணிக்கு அன் பர்கள் எழுந்து அருவி ஸ்நானம் செய்து, காலைக் கடன்களையும், பிரார்த்தனையையும் முடித்துக்கொண்டுஏழுமணிக்கு "ஸ்ரீ நாராயண ஹரிநாராயண" என்னும் நாமஜபத்துடன் கேரளா புனிதயாத்திரையைத் தொடங்கி னோம். செங்கோட்டை வழியாக, இயற்கை அழகும் எழில் கொஞ்சும் பசுமையும் இருமருங் கிலும் கண்களுக்கு விருந்தளிக்க, எட்டு மணி சுமாருக்கு ஆரியங்காவுக்கு வந்து சேர்ந்தோம். இங்கு எழுந்தருளியிருக்கும் தர்ம சாஸ்தா வைத் தரிசனம் செய்தோம். மூலவிக்ரகமும், கோவிலும் மிக அழகாகவும், ஆசாரசீல முடைய சூழ்நிலையிலும் காணப்பட்டன.

அங்கிருந்து கொளத்துப்புழை என்ற இடத்திற்கு வந்து சேர்ந்தோம். கல்லடை என்ற ஆற்றைப் படகில் கடந்துதான் கோவி லுக்குச் செல்லவேண்டும். அங்கும் பால சாஸ்தா தரிசனம் செய்தோம். இங்கு தாய்மார் களை ஆலயத்திற்குள் அனுமதிப்பதில்லை. கொளத்துப்புழையிலிருந்து காலை பத்தரை மணிக்குப் புறப்பட்டு, மலைநாட்டின் வனப்புக் களையும்,பெரியதும்,சிறியதுமான ஆறுகளையும், நடை, உடை, பேச்சு முதலியவைகளில் முற்றி லும்மாறுபட்ட ஆண்,பெண்பாலர்களையும் வழி நெடுகக்கண்டு களித்துக்கொண்டே பகல் சுமார் 12-30 மணிக்குத் திருவனந்தபுரம்சேர்ந் தோம். திருவனந்தபுரத்தில் மிருகக்காட்சிச் சாலையையும், பொருட்காட்சிச்சாலை(Museum) யையும் கண்டு களித்தோம். இறைவன் படைப் பில் எத்தனை விதமான உயிரினங்கள் எங் கெங்கு படைக்கப்பட்டிருக்கின்றனவோ அவை களையெல்லாம் ஒரே இடத்தில் காண்பதற்குச் செய்யப்பட்டிருந்தஇப் பொருட்காட்சிச்சாலை,

குழந்தைகள் முதல் முதியோர்கள் ஈறாக யாவருக்கும் மகிழ்ச்சியையும் படிப்பினையையும் நல்குவதாக இருந்தது. சித்திரச்சாலையிலிருந்த உலகப்புகழ்பெற்ற ஓவியர் ரவிவர்மாவின் சித்திரங்கள் உயிரோவியங்களாகக் காட்சியளித்தன.

மூன்று மணியளவில் திருவனந்தபுரம் அன்பர்கள் இருவர்எங்களை மிருகக்காட்சிச் சாலையில் அன்புடன் வரவேற்றனர். அவர்களுடன் நாங்கள் "பூஜைப் புரை" என்ற இடத்திலிருக்கின்ற ஓர் அன்பர் வீட்டில் மாலைச் சிற்றுண்டி அருந்திவிட்டுச் சாஸ்தமங்கலம் என்னுமிடத்தில் இருக்கின்ற ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷின் ஆஸ்பத்திரியையும், மடத்தையும் பார்த்தோம். அங்கிருந்து திருவனந்தபுரத்தில் மிகப்பிரசித்தி பெற்ற ஆலயமாகிய ஸ்ரீ பத்மநாப சுவாமி திருக்கோவிலுக்கு வழிபாட்டிற்குச் சென்றோம். இக்கோயிலிலுள்ள சுவாமி அனந்தசயனம் என்று அழைக்கப்படுகிறார். இங்கு மூர்த்தி ஸ்ரீரங்கத்தில் உள்ளது போல் பள்ளிகொண்டிருக்கிறார். கருவறையில் அவர் திருக்கோலத்தை மூன்று வாயில்களின் வழியே கண்டு வணங்கலாம். இக்கோவில் மற்றகேரளக்கோவில்களினின்று மாறுபட்டுத் தமிழ்நாட்டுக் கோவில்களைப் போலவே கல் மண்டபங்களையும், அழகிய சிற்பங்கள்நிறைந்த கோபுரத்தையும் உடையதாக இருக்கிறது. இது பழைய திருவாங்கூர் மன்னராகிய ஸ்ரீ சித்திரைத் திருநாள் மகாராஜாவினால் பராமரிக்கப்பட்டு வருகிறது. ஸ்ரீ பத்மநாப சுவாமி அம்மன்னருடைய குலதெய்வம் ஆதலால் தினமும் காலை எட்டுமணிக்கு மன்னர் தரிசனத்திற்கு வருகிறார். இங்கு ஐப்பசியிலும் பங்குனியிலும் நடக்கும் நீராட்டு விழாவில் பக்தர்களுடன், சுவாமி கடற்கரை சென்று நீராடிவரும் அவ்விழாவைக் காண வெளிமாநிலங்களிலிருந்து ஆயிரக்கணக்கானவர்கள் வருவார்கள். இக்கோயில் தரிசனம் முடித்துக்கொண்டு, பத்மதீர்த்தம் என்னும் அழகிய தெப்பக்குளத்திற்கு முன்புள்ள மேத்தன் மணி என்று சொல்லப்படுகிற பெரிய விநோத கடிகாரத்தையும் கண்டு விட்டு, அருகிலிருக்கின்ற ஸ்ரீ அபேதானந்த சுவாமிகளின் ஆஸ்ரமத்திற்குச் சென்றோம். அதன் பின் வலியசாலை அன்பர் அவர்களின் இல்லத்தில் இரவு உணவு அருந்திவிட்டுச் சுமார் பத்து மணிக்குப் பூஜைப்புரை அன்பர் வீட்டில் இரவு ஓய்வு எடுத்துக்கொண்டோம். திருவனந்தபுரத்தில் ஸ்ரீ வராகம் என்ற இடத்தில் ஸ்ரீ வராக மூர்த்தியாகக் காட்சி அளிக்கும் விஷ்ணு க்ஷேத்திரம், ஸ்ரீ கண்டேஸ்வரம் என்ற இடத்தில் நஞ்சுண்டேஸ்வரர் என்ற பிரசித்திபெற்ற சிவாலயம், திருவல்லம் என்ற இடத்தில் ஸ்ரீபரசுராமர்க்ஷேத்திரம், கடற்கரையில்உள்ள கோவலம் ஆகியவை திருவனந்தபுரத்திலுள்ள பார்ப்பதற்குரிய முக்கியமான இடங்கள் ஆகும். (தொடரும்)

---

# செய்திகள்

நிகழ்பவை

*19—11—78* ஞாயிற்றுக்கிழமையன்று ஈரோடு பெரியார் மன்றத்தில் **ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள்** ஒருநாள் அந்தர்யோகம் நடாத்துவார்கள்.

*27—11—78* திங்கட்கிழமையன்று காலை **10-30** மணி முதல் **11-30** மணி வரை வடஆற்காடு ஜில்லா கீழ் அரசம்பட்டு, அரசினர் உயர்நிலைப்பள்ளி மாணாக்கர்களுக்கு **ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள்** அறவுரை வழங்குவார்கள்.

*4—12—78* திங்கட்கிழமை காலை **10-30** மணி முதல் **12-00** மணி வரை தென்ஆற்காடு ஜில்லா, அவலூர்பேட்டை அரசினர் உயர்நிலைப்பள்ளி மாணவர், மாணவியர்களுக்கு **ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள்** அறவுரை வழங்குவார்கள்.

---

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

## இயற்றிய நூல்கள்

திருவாசகம்-மூன்றும் பதிப்பு
பிரசார விலை ரூ. 14-00
ஸ்ரீமத் பகவத்கீதை-பனிரெண்டாம் பதிப்பு
பிரசார விலை ... 12-00
ஞானயோக விளக்கம் ... 8-00
ராஜயோக விளக்கம் ... 8-00
கர்மயோக விளக்கம் ... 7-00
பக்தியோக விளக்கம் ... 6-00
பரமஹம்சரின் பெருமை ... 6-00
விவேகானந்த விவரணம் ... 4-00
ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் ... 4-00
விவேகானந்த உபநிஷதம் ... 4-00
கடவுளின் வடிவங்கள் ... 4-00
சந்தேகம் தெளிதல் பாகம்-I ... 3-50
சந்தேகம் தெளிதல் பாகம்-II ... 3-50
அனுஷ்டான வேதாந்தம் ... 3-00
எதிர்கால இந்தியா ... 3-00
ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரி
ஆறும் பதிப்பு-பிரசார விலை ... 2-75
தினசரி தியானம்-பதினூன்காம் பதிப்பு
(பிளாஸ்டிக் உறையுடன்) பிரசாரவிலை ... 2-75
ஸ்ரீ ராமகிருஷ்ணர் சரிதம் ... 2-00
தேவரகசியம் (முதலிய கதைகள்) ... 2-00
ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம் ... 2-00
கண்ணன் என்னும் கடவுள் ... 2-00
**தாயுமானவர் இயற்றிய**
பரிபூரணானந்தம் விரிவுரை ... 3-00
சின்மயானந்த குரு ஷ ... 3-00
ஆனந்தமானபரம் ஷ ... 3-00
சுகவாரி ஷ ... 3-00
மௌனகுரு வணக்கம் ஷ ... 3-00
எங்கும் நிறைகின்றபொருள் ஷ ... 2-50
கருணாகரக்கடவுள் ஷ ... 2-00
பரசிவ வணக்கம் ஷ ... 1-00
விரதவீரர் பீஷ்மர் (நாடகம்) ... 1-50
பஜனைப் பாடல்கள் ... 1-50
சந்நியாசி ... 1-25
குழந்தைகளின் களிக்கூடம் ... 1-00
இராவண தத்துவம் ... 1-00
சகோதரி நிவேதிதை ... 1-00
ஹரிச்சந்திரன் (நாடகம்) ... 1-00
காயத்ரீ ... 1-00
வாலிமோக்ஷம் (நாடகம்) ... 1-00
தவப்புதல்வர்கள் (நாடகம்) ... 1-00
ஏகலைவ்யனின் குருபக்தி (நாடகம்) ... 1-00
நோய்க்கு இடம் கொடேல் ... 0-80
நன்மக்களைப் பெறுதல் ரூ. 0-80
பாண்டவ கௌரவ பெருமை (நாடகம்) ... 0-80
ஆத்ம சக்தி ... 0-75
பாதுகா பட்டாபிஷேகம் (நாடகம்) ... 0-75
இறை வணக்கம் ... 0-75
செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? ... 0-75
*மனிதனது நிஜசொரூபம் ... 0-70
*சக்தி தத்துவம் ... 0-70
*சிவ தத்துவம் ... 0-70
பிரஹ்லாதன் (நாடகம்) ... 0-65
பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி கர்வபங்கம் ... 0-65
*ஈசன் எங்கும் நிறைந்துள்ளான் ... 0-60
இந்து மதமும் கிறிஸ்துவ மதமும் ... 0-60
*ஆலய வழிபாடு ... 0-60
*சூரிய நாராயணன் ... 0-50
*முருகக் கடவுள் ... 0-50
*விஷ்ணு தத்துவம் ... 0-50
தெய்வீக மகிமைகள் ... 0-50
சைவன் யார்? ... 0-50
கர்மகாண்டம் எது? ஞானகாண்டம் எது? ... 0-50
மார்க்கண்டேயன் (நாடகம்) ... 0-40
தபோபலன் (நாடகம்) ... 0-40
*கணபதி ... 0-40
நன்னெறிகளும் அருள்வாக்குகளும் ... 0-40
வர்ணாச்ரம தர்மம் ... 0-30
அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் ... 0-30
The Bhagavad Gita (9th Imp.) ... 15-00
The Indian National Education ... 8-00
Sri Lalithambika Sahasranama Stotram ... 8-00
Ramakrishna Lives Vedanta ... 8-00
Facets of Brahman or The Hindu Gods ... 5-00
Daily Divine Digest (DELUXE) ... 4-50
Daily Divine Digest Ordinary ... 2-50
Mahabharata (with plastic cover) ... 4-50
Ramayana (do) ... 4-00
The Man Making Message of
Vivekananda (with plastic cover) ... 3-00
The Bhagavad Gita (Small Size)
(With plastic cover) ... 3-00
Holy Bible—In the Light of Vedanta ... 1-50
*Introducing the Gita ... 1-50
*Key to Higher Life ... 0-75
*The Teacher ... 0-60
*The Student ... 0-45

தேவையான புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணத்திற்காக ஸ்ரீமத் பகவத்கீதைக்கு ரூ. 3-25ம் மஞ்ஜரிக்கு ரூ. 2-65ம் தினசரி தியானத்திற்கு ரூ. 2-40ம் மற்ற வெளியீடுகளுக்கு ரூ. 2-50 முதல் 3-50 வரை சேர்த்து அனுப்புங்கள்.

*இக்குறியிட்ட புத்தகங்கள் ஏனைய பெரிய புத்தகங்களில் அடங்கியுள்ளன.

# கன்னியாகுமரியில் அந்தர்யோகம்

டிசம்பர் மாதம் 9, 10 சனி, ஞாயிறு ஆகிய தேதிகளில்

இடம் : ஸ்ரீ பகவதி அம்மன் கோவில்

நேரம் : அதிகாலை 5-00 மணிமுதல் இரவு 9-30 மணிவரை கீழ்க்கண்ட சாதனைமுறைப்படி நடைபெறும்.

நடத்துபவர் : ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

இதர விவரங்கள் : உணவு, ஜாகைக்காக நபர் ஒருவர் நாள் ஒன்றுக்கு ரூ. 7-00 விதம் ரூ. 14-00 டிசம்பர் மாதம் 5ஆம் தேதிக்கு முன்பே கன்னியாகுமரி மாவட்டம் ஈத்தாமொழி ஸ்ரீகோம்பை சுவாமி கோவில் தர்மகர்த்தா திரு. S. தங்கவேல் நாடார் அவர்களுக்கு மணிஆர்டர் மூலமோ அல்லது நாகர்கோவில் தெற்கு ரத வீதி ராமலட்சுமி நிலையம் திரு. பொன்னையா ஐயப்பன் அவர்களிடம் நேரிலோ செலுத்திப் பெயர்களைப் பதிவு செய்துகொள்ளலாம். பணம் அனுப்புகின்ற முதல் நூற்று ஐம்பது பேர்கள் மட்டும் பதிவுசெய்துகொள்ளப்படுவார்கள். பணம் அனுப்பிக் கலந்து கொள்ளாத அன்பர்களுக்குத் தொகை திருப்பித்தரப்படமாட்டாது. தாய்மார்களும் இதில் கலந்துகொள்ளலாம். பன்னிரண்டு வயதுக்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும், கைக்குழந்தையுடன் வரும் தாய்மார்களும், நடைமுறையைப் பின்பற்ற இயலாதவர்களும் இதில் சேர்த்துக்கொள்ளப்படமாட்டார்கள். தங்கள் சௌகரியத்திற்குத் தேவையான படுக்கை முதலியவற்றைத் தாங்களே கொண்டுவரவேண்டும். டிசம்பர் மாதம் 8ஆம் தேதி மாலையிலேயே யாவரும் வந்துசேரவேண்டும். 10-12-78 ஞாயிறு மாலை ஐந்துமணிக்கு அந்தர்யோகம் முடிவுறும்.

டிசம்பர் மாதம் 9ஆம் தேதி சனிக்கிழமை காலை பிரார்த்தனை, தியானம் இரண்டும் விவேகானந்தர் சுவாமிகள் சிலை முன்பும், மாலை நிகழ்ச்சிகள் விவேகானந்தர் பாறையில் அமைந்துள்ள மண்டபத்திலும் நடைபெறும்.

## சாதனை முறை

### காலை

| | மணிமுதல் | மணிவரை |
|---|---|---|
| துயில் எழுந்திருத்தல் | 5-00 | |
| எல்லாரும் ஒன்றுகூடி நாமஜபம் | 5-30 | 6-00 |
| நீராடல் முதலியன | 6-00 | 7-30 |
| காலை தியானம் | 7-30 | 8-00 |
| சிற்றுண்டி | 8-00 | 9-00 |
| காலை உபந்யாசம் | 9-00 | 10-00 |
| மௌனம் | 10-00 | 11-00 |
| பஜனை | 11-00 | 11-45 |
| கோவில் வழிபாடு | 11-45 | 12-30 |

### மாலை

| | மணிமுதல் | மணிவரை |
|---|---|---|
| போஜனம், ஓய்வு | 12-30 | 3-00 |
| மாலை உபந்யாசம் | 3-00 | 4-00 |
| தனியாக வாசித்தல் | 4-00 | 4-30 |
| பானம், உலாவல், நீராடல் முதலியன | 4-30 | 6-15 |
| நாம ஜபம் | 6-15 | 6-45 |
| தியானம் | 6-45 | 7-15 |
| இரவு போஜனம் | 7-15 | 8-30 |
| ஸத் ஸம்பாஷணை | 8-30 | 9-30 |

அந்தர்யோகக் குழுவினர், கன்னியாகுமரி.

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Sankarananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.